Vol. XVII.] FEBRUARY, 1909. REGISTERED—M 108. [No. 2

லேசான காகிதப்பதிப்பு.
தனிப்பிரதி, 5½ அணா.
பழைய பிரதி, 6 ,,

சந்தாவின் விவரம்.
ஒருவருஷத்துக்கு ரூ. 4
6 மாதத்துக்கு ,, 2-2

33




அறிவைப் பரவச் செய்வதற்கான மாதாந்தரத் தமிழ்ப் பத்திரிகை.

**DEVOTED TO PRACTICAL TRUTH AND KNOWLEDGE.**

அறிவுடையாரெல்லாமுடையாரறிவிலா
ரென்னுடையரேனுமிலர்.—திருக்குறள்.

A POPULAR NEW REVIEW & TAMIL MONTHLY
*Estd. May, 1892.*

கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்கவதற்குத்தக.—திருக்குறள்.

ILLUSTRATING THE PRINCIPLES OF EDUCATION, PSYCHOLOGY, SOUL-CULTURE & ETHICS. ADAPTED FOR USE IN HOMES & SCHOOLS

"Hitch your wagon to a star."—Emerson.

## CONTENTS.



## அடக்கம். பக்கம்.



"Our Theism is the Purification of the Human Mind"—Emerson.

Thick Paper Edition for Patrons.] *PUBLISHED BY* [Minimum Subscription Rs. 5.

**The Secretary, Diffusion of Knowledge Agency,**

*Lalitâlaya, Mylapore, Madras, S.*

**For The Viveka Chintamani Publishing Committee.**



Thin Paper Edition for the People.] [Subscription Price: Yearly Rs. 4

*"Like a spider, like the earth, and like a living creature He produces the Universe."—Upanishad.*

# THE UNITY OF RELIGION AND THE VARIETY OF CREEDS.

By C. V. SWAMINATHA IYER.

A masterful exposition of the Principle of Unity in Variety—the Fundamental Law of Nature that unifies and harmonises apparently conflicting ideas and diversity of interests by the magic touch of the Spirit indwelling. Delivered at the Ranade Hall as an anniversary address; inspiring and instructive as the whole is written in the light of actual experience. "Will give enough food for reflection for a year" as the Chairman of the meeting remarked. Every thinking man must read, mark, and inwardly digest the truth contained in this Essay. Neatly printed with a full and detailed synopsis of contents. Crown 8vo., 56 pages. **6 annas.**

"An accomplished writer."—Mr. MYRON H. PHELPS, of the New York Bar.

"He is rendering a real service to the complex religious life of India."—Dr CUTHBERT HALL, of Chicago.

"Your writings breathe the highest sentiment of true religion and devotion."—Pandit S. M. NATESA SASTRI.

"Mr. C. V. Swaminatha Iyer is not a mere Theorist or Essayist; he has done much practical work."—Mr. H. K. BEAUCHAMP, Editor of the *Madras Mail.*

We have received from Mr. C. V. Swaminatha Iyer a copy of "the Unity of Religion and the Variety of Creeds"......which is to be read before the forthcoming Congress of Religions with a specially written thesis on "Religion and Religions" which maintains that the various religions of India are but so many facts of one true Religion—the Religion of truth.—*The Madras Mail.*

"*The Unity of Religion and the Variety of Creeds* is the title of an excellent little brochure, comprising an Essay on the subject read by Mr. C. V. Swaminatha Iyer, the well-known Editor of the *Viveka Chintamani* at the Ranade Hall, Mylapore, in April last. Mr. Swaminatha Iyer is widely known for his religious piety and Vedantic culture, and in the present instance, he, with admirable spirit, sets forth the Vedantic Ideal of life in the light of modern principles of Science, defining the Laws of Life-governing Thought. The Essayist brings to his task all earnest and genuine study of comparative Religion, and in our opinion, he is rendering a real service to the complex religious Life of India by endeavouring to rise above disputes upon secondary matters, and focussing attention on those elements of absolute Truth which are of permanent validity and of universal application. Various quotations from the Bible and the writings of Western Savants, Emerson and Maeterlink, and of Indian Saints like *Tiruvulluvar* and *Thayumanavar*, have been set forth to point to the realisation of the Unity of Religion, though the number of Creeds in the World is legion, "each having a significance of its own and a relation to the whole. The average Indian Reader will feel at home in the Author's line of Vedantic thought, while, we are sure, the attempt at reconciling Vedanta with the Western conception of Thought-Energy will afford mental food for him. And the Vedanta ideal Life which is most maligned though least understood by some of its Western critics, will, we are sure, attract to itself their thoughtful attention by the Author's spirited exposition of it. In short, the publication should be in the hands of every one who is disposed to inquire into the real Spirit of Universal Religion, although one cannot always travel with the author in his mystic wanderings in the regions of Yoga practice."—*The United India and Native States.*

**To be had of all book-sellers in Madras, Price Annas Six Only.**

V. KALYANARAM IYER & CO., ESPLANADE, MADRAS, E.
SREENEVASA VARADACHARY & CO., TRIPLICANE, MADRAS, S. E.
P. R. RAMA IYER & CO., ESPLANADE, MADRAS, E.
DIFFUSION OF KNOWLEDGE AGENCY, MYLAPOR, MADRAS, S.

---

## FOUNTAIN PENS.

| | Rs. | A. |
|---|---|---|
| Alliance or Fortune Pen, with 14 Ct. iridium tipped gold nib each... | 3 | 0 |
| No. 5 Alliance, the biggest size pen for writer's cramp, cures effectively ... | 10 | 0 |
| "Utility" with metal nib and 4 extra nibs | 1 | 0 |
| School boy pen with metal nib and vulcanite spring feed, fits No. 314 Relief nibs As. 6 only ... | 0 | 6 |
| Pasupathy pen with metal nib ... | 1 | 0 |
| Leather pockets, single or double ... | 0 | 6 |
| Leather Morocco single or double ... | 0 | 12 |
| Ink pellets in glass tubes in colours (blue, black, green, red [illegible] violet) ... | 0 | 4 |

**THE ALLIANCE Co., [illegible]ylapore, Madras.**

## THE BHAGAVAD-GITA VENBA.

A close, accurate and reliable translation in easy and flowing verses. 260 pp. cloth, Re. 1. Per. V.P.P. Rs. 1-8.

ஸ்ரீபகவத்கீதை வெண்பா.

சுலபமான இனிய நடையில் பொருள் விளங்க சுலோகத்துக்கு ஒரு பாடலாக மொழி பெயர்க்கப்பட்டுள்ளது விலை ரூபா வி-பி. மூலமாக ரூபா, 1—8.

*S. MUTHU IYER, B. A.*
H. H. SCHOOL MASULIPATAM.

உ

*"Give me not, O God, the blind, fool faith in my friend, that sees no evil where evil is, but give me, O God, that sublime belief, that seeing evil I yet have faith."*

*"Seek Truth wherever you can find it." But, "Make your choice and stick to it till you reach the End."*

ஸத்யம்வத,—**Speak the Truth.**

**"Hitch Your Wagon to a Star."** **"To Thine Own Self be True."**




அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம் தத்சத்.] [God is Love: Knowledge is Power. *Aum.*

ஸத்யமே ஜெயம்—**Satyameva Jayati.**

புத்தகம் **17.**] **1909**-ஹு பிப்ரவரி மீ [சஞ்சிகை **2.**

## The Place of Physical Education in A Nation's Vitality.

"Physical training may be defined in general terms as the development by use and wont of the motor powers of the human body either for the sake of health or discipline, or for the sake of both. We see from this general definition that our work consists in developing the motor powers for the purpose of the two things mentioned, that is, health and discipline. But let me add at once, that we may not forget it during the entire lecture, the fact that the motor powers cannot be developed by themselves, but in their development the mental and psychological faculties and characteristics of the body must of necessity advance and develop with the development of the motor powers."

"We have but to look at history to easily understand that a great deal in the matter of physique, of mentality, and of religion in a nation's life is dependent perhaps more upon the question of the ideal than upon any one other factor. For into the channel of the ideal all ideals necessarily flow. Each small stream of thought and of interest converging moving toward the one central way that is the Concept in the mind of the individual or the nation......Each system of education has developed according to its ideal standards, and the product that now is, is the result of the ideal that has been in the minds of people in days gone by."—*Dr. Gray* on "the place of physical education in a Nation's Vitality," at the Calcutta Y. M. C. A.

## தேஹப்பயிற்சியும் ஜாதிவீரியமும்.

ஒரு தேசத்தார் ஜாதிமொத்தத்தில் (அதாவது ஸமஷ்டிபாவத்தில்) வீரியங்குன்றாதவரா யிருக்கவேண்டுமாயின் அவர்கள் மனப்பயிர்ச்சிபோல், தேஹப்பயிர்ச்சியும் செய்துவரவேண்டுமென்பதைப்பற்றி டாக்டர் க்ரே என்பவர், கல்கத்தா வாலிப கிறிஸ்தவ சங்கத்தார் கூடின பொதுஜனக்கூட்டத்தில் ஓர் திவ்யப்பிரசங்கம் செய்தார். ஞானத்தின் முடிவான அந்தம் விதேஹ கைவல்யமென்று சொல்வதினால், தேஹத்தைவதைத்துச் சித்திரவதை செய்வது அதற்கு சாதனமென்று பலர் மூடமாய் நினைக்கிறார்கள். ஸ்ரீகிருஷ்ண பகவான் ஞானத்தைவிட யோகத்தை மிகமேலாக மெச்சிப்பேசி, அர்ச்சுனனைப் பார்த்து "நீ யோகியாயிரு"— என்றால், "யோகாப்பியாஸம் செய்து யோக சாம்ராஜ்யத்தைப்பெ

றுவாயாக" என்றபடி, போதித்திருக்கிறார். மஹாவஸித்தராகிய திருமூலதேவரும்

"உடம்பினை யிழுக்கென் றிருந்தேன்
உடம்பினுக்குள்ளே யுறுபொருள்கண்டேன்
உடம்பிலேயுத்தமன் கோயில்கொண்டானென்
உடம்பினை யானிருந்தோம்புகின்றேனே."

என்றுசொல்லியிருக்கிறார். அப்படியிருக்க, தேஹவதைசெய்வது ஆத்மஞானத்துக்கு அடுத்தசாதன மென்கிற தப்பெண்ணம் அப்பியாஸிகள் அறியாமையினால் அனுஷ்டித்த தப்புவழிகள் பற்றிவந்ததன்றி வேறல்ல. ஆனால் தேஹப்பயிற்சியென்றால் என்ன? மலைபோல் ஊனை வளர்ப்பது ஒருக்காலும் தேஹப்பயிர்ச்சியாகமாட்டாது. பின்னையென்னவெனில், சித்திரத்துக்குச் சுவர்போலும், மனதுக்கு இந்திரியக்கூட்டங்களுக் கிருப்பிடமான தேஹம் உபகரணமாக விருக்கிறது. தேஹத்தைக்கொண்டன்றி மனதுக்கு உலகத்தை யாய்ந்தறியவேறுவழியில்லை. ஆகையால் தேஹம் வலுத்திருந்தால்தான் மனது அதை நன்றாக உபயோகிக்கக் கூடும். ஆனால் தேஹம் வேறு மனம்வேறான இரண்டும்இரண்டோவென்றால், அதுவுமில்லை.

"உடலோடுயிர்வந்தோன்றுவதியல்பே."

என்றபடி, உடலுக்கும் உயிருக்குமுள்ள சம்பந்தம், புருஷன் பிரகிருதிக்குள்ள தொத்தஅத்வைத சம்பந்தமாம். பாரிஸ்நகரில் ஒரு சாஸ்திர விற்பன்னர் மனிதனுடைய மூளை விர்த்தியை யளந்து பார்த்து, இந்தப்பிரகாரம் மனிதன்மூளை அதிகரித்துக்கொண்டுவர அதற்குத்தக்கபடி தலையும்பெருத்துவந்தால், மனிதனுக்கு நாசகாலம் கிட்டிவிடுமென்று சொன்னார். ஏனென்றால், சிசுவின் தலை இன்னும் பெரிதாக வளர்ந்ததானால், கர்ப்பத்திலிருக்கும் சிசு வெளியில் வருவது அசாத்தியமாய் விடுமென்றார். எப்படியெனில், ஸ்திரீகளுடைய எலும்புக்கூடு எவ்வளவு தூரம் சிசுவின் தலைநுழைந்து வெளியில் வர இடங்கொடுப்பது சாத்தியமோ, அவ்வளவுக்கு நாகரீகமனிதனுடைய தலை சிசுவாயிருக்கையிலேயே இப்பொழுது வளர்ந்துவிட்டது. இன்னம் பெரிதானால், வாழை தானீன்றகுலையால் மரணமடைவதுபோலும், நண்டு தானீன்ற குஞ்சால் மரணமடைவதுபோலும், மனிதன் "ஒருதாய்க்கொருபிள்ளை"யென்கிறவகுப்பில் சேர்ந்தவனாய்விடுவான் என்பது அவருடைய சித்தாந்தம். மனிதன் மூளை இதுவரையில் விர்த்தியானதுபோல், இதேபிரகாரம் ஸ்தூலத்தில் விர்த்தியாய்க் கொண்டுவந்தால் அவருடைய சித்தாந்தம் உண்மைதான். மனிதஜாதி க்ஷீணித்துப்போகும்தான். ஆனால் உண்மையை உள்ளபடி பார்க்கில் அவர் பஹிர்முக் ஆராய்ச்சியால் ஆய்ந்துநிதானித்தபடி வாஸ்தவத்தில் மனிதனுடைய விர்த்தி நேர்செங்குத்தாகவாவது, நேர்விஸ்தாரமாகவாவது வளருவதாகவில்லை. பரிணாமவிதிப்படி பிராகிருததர்மமெல்லாம் கொடிமரத்தைக்கொடிசுற்றுவதுபோலும்சுற்றிச்சுழன்று மேலேறுவதாயிருப்பதால், ஸ்தூல சூக்ஷ்ம காரண சரீரங்களின் அமைப்பழகு பின்னப்படுவதில்லை. பிரவிருத்திமார்க்கமே சுற்றுச் சுழன்றெழுவதாயிருக்கிறது. தண்ணீர்ச்சுழியெப்படிக் கீழ்நோக்கிச் சுழன்று செல்லுகிறதோ அப்படியே மேல்நோக்கியெழும் சுழியும் இருக்கிறது. முகக்கண்ணுக்குத் தெரியாவிட்டாலும் அகக்கண் படைத்தவர்களுக்கு அது ஸ்பஷ்டமாய் விளங்கும். ஆகையால் தேஹப்பயிர்ச்சி யவசியமென்றால், தேஹதர்மத்தையொட்டி தேஹத்தைப் பயிர்செய்ய வேண்டியது அவசியம் என்று அர்த்தங்கொள்ளும்.

தேஹதர்மம் என்றால் என்ன? மரம் வைத்தால் அது அதன் 'தர்மத்தை'—இயற்கை விதியை—யொட்டிவளர்ந்து பருவத்தே பூத்

துக்காய்த்துப் பிஞ்சுவிட்டு முதிர்ந்து பழமானபிறகு அம்மரத்தின் வீரியமுழுவதும் அப்பழத்தின் வித்துவோடுங்கி, பரிபக்குவ முதிர்ந்த காலத்தில் பழுத்தபழமும் கொம்பினின்று நழுவி விழுவதுபோல, தேஹத்தின் தர்மமும் அறப்பயிர்செய்ய க்ஷேத்திரமாகவிருக்கிறது. புருஷார்த்தம் நான்கும் அனுபவிக்க தேஹம் இன்றியமையாததாயிருக்கிறது. மரம் பழத்தை யீன்று, பழத்துள் ஒடுங்கித் தானே விழுந்துபோவதுபோல, அதன்தர்மவிதியையனுசரித்துப் பயிர் செய்யப்பட்ட தேஹமும், திடகாத்திரமாய் வளர்ந்து பூத்துக்காய்த்துப் பிஞ்சுவிட்டு, முதிர்ந்து பழுத்து அதற்கு மூலமாயிருந்த மனத்துக்குள் (வித்தினுள்மரம்போல்) ஒடுங்கி மனத்தை தேஹத்தினின்றும் வேறுகப்பிரிக்கும் சக்திவாய்ந்ததாம். புளியும்ஒடும் ஒன்றுயிருந்து,முதிர்ந்துபழுத்தபொழுதுஇரண்டிற்கும் காரணமான காம்பண்டையில் மட்டும்இரண்டும் ஒன்றுபட்டு விளங்க, மற்றப்படிபுளிபோடும் பழமும்எப்படிவேறுபட்டுப்பிரிந்துநிற்குந்தன்மை வாய்ந்ததாயிருக்கிறதோ, அதுபோல அறப்பயிர்செய்து முதிர்ந்ததேஹமும் புளி-யோடுபோல வேறுகப்பிரிந்து, காரண தேஹத்தில் மட்டும் மனத்தோடொன்றுபட்டு நிற்குந்தன்மையதாய் விளங்கும்.

> "ஈதலறந் தீவினைவிட் டீட்டல்பொரு ளெஞ்ஞான்றும்
> காதலிரு வர்க்குங் கருத்தொருமித்-தாதரவு
> பட்டதே யின்பம்; பரனைநினைந் திம்மூன்றும்
> விட்டதே பேரின்பவீடு."

என்று ஔவையார் புருஷார்த்தம்நான்கின் இயல்பைச் சொல்லியிருப்பதில், தன்னைக் கொடுத்தலே தருமம்; பரசேவையாலன்றி அஹம்விருத்திவாய்ப்பதில்லை: இந்தப்பரசேவையாலேயே ஸ்வஜீவனமும் நடக்குமாதலால், "தீவினைவிட்டீட்டல் பொருள்" என்றார். கருக்கலந்தாலன்றி உருக்கலப்பதில்லை. இது பிராகிருத தர்மம். இமைப்பொழுதேனும் கருக்கலந்த விடத்துண்டாகும்ஒற்றுமையே ஐக்கிய பாவத்தால் அந்தக்ஷணமாத்திரம் [illegible]க்குமோர் இன்பத்தைக்கொடுக்கும். இது அற்ப இன்பம். கருக்கலப்பதற்குக்காரணம்காதலேயாதலால், "காதலிருவர்க்கும்"—அன்புநிறைந்த இருவர்க்கும் உள்ளமொன்றினதுபோல் நீடித்தகாலம் (எஞ்ஞான்றும்) "கருத்து ஒருமித்து," அந்த ஒருமித்த கருத்தின் காரணமாக ஒருவர்க்கொருவர் இன்றியமையாதபடி "ஆதரவுபட்டு"நின்றால், அதுவே "இன்பம்": உலகத்தில் அனுபவிக்கக்கூடிய இன்ப நுகர்ச்சியாம்.

இம்மூன்று வழிகளிலும் முதிர்ந்துபழுத்த இல்லறக்கிழவன் கொம்பில்பழுத்த பழங்கனிபோல், இம்மூன்றும் ஆத்மாநந்தத்தைக் கொடுக்கப்போகாதவை யென்று உள்ளத்துணர்வால் அனுபவமுதிர்ச்சியிலுணர்ந்து, ஆத்மாநந்தத்தைக் கொடுக்கத்தக்கவன் பகவான் ஒருவனேயென்று திடஞானம் உதிக்க, அந்த நிச்சயபுத்திகாரணமாயுதித்த விரக்தி வைராக்கியத்தில் "பரனைநினைந்து" பாமரரையிகழாது, பரங்கருணை மிகுதியால் அவர்கள் அறியாமைக்கிரங்கி, "அறம், பொருள், இன்பம்" எனும் மூன்றுபுருஷார்த்தங்களையும் பூரணமாயனுபவிக்கவேண்டி, "வேண்டுவதைப் பெற வேட்கையைத்துற" என்னும் ஆபத்வாக்கியத்தை யனுசரித்து, நிறைபொருளை யனுபவிப்பான் குறைபொருளை விட்டொழிக்குந் தன்மைபோல், "இம்மூன்றும் விட்டு" பூரணப்பொருளை யிடையறாது யனுபவித்தலாம் பேரின்பத்தை நுகர்வதே "வீடு" என்று சொல்லும் பந்தநிவர்த்தியாம் மோக்ஷம். அப்பொழுது மனிதன் தன்னகத்திருந்த தெய்வத்தைஅஹமும்புறமும்நிறையக்கண்டு, அஹம்புறமற்றனுபவித்து, எல்லாவற்றிலும் அந்தர்யாமியாயிருந்து "ஸர்வம்விஷ்ணுமயம் ஜகத்" என்றபடி, இந்த ஜகத்தையெல்லாம் விஷ்ணுமயமாக வறிந்து தானும் அந்த விஷ்

ணுவாகவே விளங்குகிறான். இதுதான் பிரவிருத்திமார்க்கம் என்றுசொல்லுவது. இதை இங்கிலீஷில் "The Path of Progress" என்று சொல்லலாம். சனைப்பன் வீட்டுக் கோழி தானே விலங்கிட்டுக்கொண்ட கதையாக, இந்திரியங்களைத் தத்தம் வழியில் போகவிட்டுத் "தன்னைக் குடிகெடுக்கும் நெஞ்சிற்குக் குற்றேவல் செய்யில்" அது பிரவிருத்தி மார்க்கத்தில் நடப்பதாகமாட்டாது. பின்னையது எதற்கொப்பாமெனில், "பிடிபடுக்கப்பட்ட களிறு,"—பெண்யானையின் மோகத்தால் படுகுழியில்தள்ளப்பட்ட ஆண்யானைக்கொப்பாம்.

இந்தப் பிரவிருத்திமார்க்கத்துக்கின்றியமையாச் சாதனம், இல்லறம்என்றுசொல்லும் கிரஹஸ்தாச்ரமம். கிரஹஸ்தாச்ரமம், பிரமசரியத்தின் மேற்படியேயன்றி, அதிலிருந்தும் நழுவி விழுந்தார்க்கானதோர் புகலிடமில்லை. ஸந்யாசியோகத்தில் தவறுதல் நேரிட்டால் பிராயச்சித்தமில்லையாதலால், பிரம்மசரியத்திலிருந்தபடி ஸந்யாசத்திற்கு (ஆசைவிடுதற்குத்) தாண்டிப்போக இயலாதவர்களுக்கு கிரமக்கிரமமாக உலகானுபவம் முதிரவேண்டி இல்லறம், இரண்டிற்கும்மத்தியில், இருவித ஆச்ரமத்தாருக்கும் ஆதாரமாக ஏற்பட்டதாயிற்று.

இந்த இல்லறதர்மம் இப்பொழுது, மேற்றிசை நாகரிகமோகத்தினாலுண்டானதோர் தர்மக்கேட்டில் தலைதடுமாறி நிற்கிறது. ஆத்மஸம்ஸ்காரமாக ஏற்பட்ட விவாகலக்ஷியம், கேவலம் மிருகப்பிராயமானதோர் காமாதுர கர்மமாக மாறிவிட்டது. ஐயோ! விவாஹம் ஆத்மஸம்ஸ்காரமாயிற்றே! "ஆயிரங்காலத்துப்பயிர்" என்று அழியாப்பேர்பெற்றதாயிற்றே! ஸ்ரீரங்கத்தில் மீரடுபிடி ஸமாசாரமாகப் பேசுகிறார்களே! யென்றால், "இவன் பைத்தியக்காரன்! எங்கேயோ தப்பித்துக்கொண்டு தெருவில் வந்துவிட்டான்" என்கிறார்கள். சிலர், இவனைப்பிடித்துப் பைத்தியக்காரர் ஆஸ்பத்திரியில் கொண்டுபோய் அடைத்துவிடவேணுமென்றும் சொல்லுகிறார்கள். விளையுமபயிர் முளையிலேதெரியும். முளைக்கும் முளையும் வித்திலேதெரியும். வித்தின்திறமும் மரத்திலே விளங்கும். கேவலம் காமவிகாரமானமரத்திலேகாய்த்து, காமத்தீ தாங்காமல் வெதும்பிவிழுந்த வெம்பற்கனியின்வித்து எப்படி முளைத்து நல்லபலனை யீன்றும்! அதுமுளைத்தாலும் தழைமட்டோடுநின்று, "இலையுதிரப் பூவுதிரப் பிஞ்சுதிரக் காயுதிர" என்ற ஆப்தவாக்யப்படி காயாகவே யுதிர்ந்தழுகி நாசமாகுமன்றி கொம்பில்பழுத்துவிழும் தன்மையடையாது. அப்படியிருக்க, "ஆயிரங்காலத்துப் பயிர்"எங்கேவிளைகிறது? ஆகாசத்தாமரைபோல், அது வெறும் மனோராஜ்ய மாத்திரமாகத்தான்முடியும். உத்தமபாவங்களமைந்த உயர்லக்ஷியங்களெல்லாம் (High Ideals) மனமொழிமெய்களால் திரிகரணசுத்தியாக அனுஷ்டிக்கப்படாக்குற்றத்தினால்கட்டுக்குலைந்து வீரியம் சிதைந்து "வருணாசிரம தர்மம்" என்று சொல்லும் உயர்பாவ எண்ணங்கள் பயிர் செய்யப்படுவதற்குப்போந்த க்ஷேத்திரங்களாயுள்ள உயர்குணமாந்தர்களை (Men of High Character) உண்டுபண்ணாது, புல்லியர், பொய்யர், புலாலுண்பார், கள்வர், கயவர்போன்ற காமிகளையுண்டுபண்ணுவதாயிருக்கிறது. டாக்டர் க்ரே யென்பவர், ஒரு தேசத்தார் ஜாதிமொத்தத்தில் வீரியம் வாய்ந்தவராய் விருத்திக்குவருவது அவர்களுடைய உத்தமபாவங்களாலமைந்த உயர்லக்ஷியம் என்னவோ அதைப் பொறுத்தது என்பது சரித்திராராய்ச்சியால் விளங்குமென்று சொல்லி, அதை கிரேக்கர் முதலியவர்களுடைய சரித்திரங்களிலிருந்தெடுத்த உதாரணங்களைக்கொண்டு வற்புறுத்திக் காட்டுகிறார். நம்மவர்கள், தேஹப்பயிர்ச்சி செய்யாமையால், சீர்கெட்டுப்போனார்களென்பது பிரத்தியக்ஷம். ஆனால் இது நமது ஜாதியின் வீரியக்குறைவால் இல்லை. கால தேச வர்த்தமானங்களால் விளை

ந்ததோர் தர்மநஷ்டத்தால் நேர்ந்ததோர் இடையூறும். இந்த இடையூற்றை நாம் நீக்கிக் கொண்டாலன்றி நாம் ஜாதிவீரியம் பெற்றவராகமாட்டோமென்று சொல்கிறார். இது மிகவும் உண்மையாதலால், நம்மவர் "ஆயிரங்காலத்துப் பயிராம்" ஆத்மவிவாக லக்ஷியத்தை யிகழ்ந்து, குடி, வெகுளி, கோபம் முதலிய மஹாபாதகங்களுக்கிருப்பிடமாகிய காமவிகாரசம்பந்தத்தை "விவாஹம்" என்கிற பேருக்கு இழுக்காக அனுஷ்டித்து அதோகதியாகப் போவதைக் காலத்தேயறிந்து சிந்தித்து நிறுத்தவேண்டுமென்று அவரோடு நாமும் சேர்ந்து வற்புறுத்திக் கூறுகிறோம். "மனம் போலிருக்கும் மாங்கல்யம்" என்பதை நம்மவர் மறக்கலாகாது. லக்ஷியம் போனவழியில் எல்லாம் இந்திரியங்களும் பின்பற்றிச்செல்லும் என்பதின் உண்மையை, இந்தப்பழமொழி நன்றாக அடித்துரைக்கிறது. உணர்வுகெட்ட நம்மவர் உணர்ச்சியுற்றெழுமாறு டாக்டர் க்ரேயவர்கள் செய்த திவ்யப்பிரசங்கத்துக்காக நாம் அவருக்கு வந்தனம் செலுத்துகிறோம்.

"பருவத்தே பயிர்செய்" என்றமுதுரையை யனுசரித்து, நம்மவர்கள் ஜாதி வீரியங்குறையாதபடி தேஹப்பயிர்ச்சி செய்வதை, தேஹோற்பத்தி மூலமான விவாஹம் தொட்டே பயிர் செய்யவேண்டும். விவாஹத்தை "ஆயிரங்காலத்துப் பயிர்" என்று அறிந்து அற்பத் தனத்தையும் அற்ப சிந்தனையையும் விட்டு, விவாஹ ஸம்ஸ்காரம் ஏற்பட்டது காமாதுரகாரியார்த்தமாகவின்றி ஜாதி வீரியம் குறையாது பிதுர்க்கடன், ரிஷிகடன், தேவகடன் என மூன்று கடன்களையும் (Life's three-fold indebtedness) (ருணங்கள் என்பார் இவற்றை) தீர்த்துக்கிருதார்த்தனாக வேண்டுமென்கிற உயரெண்ணங்கொண்டு ஏற்பட்டதோர் உத்தமஸம்ஸ்காரமாக உள்ளத்துணர்வெழ மதித்து மணமாக்ஷியின் மாண்புக்குக் குறைவுவராதபடி நடந்துகொள்வார்களென்று திருவருளைச் சிந்தித்து நிற்கின்றோம்.

---

## LORD MORLEY'S REFORM SCHEME.

## லார்ட் மார்லி செய்யவிருக்கும் துரைத்தனச் சீர்திருத்தங்கள்.

இந்தியா மந்திரியாகிய லார்ட் மார்லி அவர்கள் இந்தியா துரைத்தன விஷயமாய்ச்சில முக்கியமான சீர்திருத்தங்கள் செய்ய உத்தேசித்து அவருடைய ஏற்பாட்டை வெளியிட்டிருக்கிறார். சென்ற டிசம்பர் மீ 17உயன்று லார்ட்ஸ் சபையில் அதைப்பற்றிய பிரேரேபணைகளை வெளியிட்டுப்பேசினார். இந்தியா கவர்ன்மென்டாரும் அவரும் இரண்டு வருஷகாலமாகக்கலந்து யோஜனை செய்ததில் இராஜப்பிரதிநிதியாகிய லார்ட் மின்டோ அவர்களும் இந்தியாமந்திரியாகிய லார்ட் மார்லியும் தேனும் பாலும்போல் மனங்கலந்து இச்சீர்திருத்தங்களைச்செய்யக்கருதியிருக்கிறார்கள். அவைகளாவன:—

இதுவரையில் இராஜப்பிரதிநிதி யவர்களுடைய மந்திராலோசனை சபைக்கு (Executive Council) இந்தியர்களை நியமித்ததில்லை. ஆனால் விக்டோரியா மஹாராணியவர்கள் 1858வருஷத்தில் செய்த விளம்பரப்படி இந்தியர்கள் அவ்வேலைக்கு லாயக்கானவர்களாயிருந்தால் அவர்களை நியமிப்பதற்குத் தடையொன்றுமில்லை. பார்லிமெந்து சட்டம் இதற்கு இடங்கொடுத்தாலும் இந்தியர்கள் காரியத்தில் இராஜப்பிரதிநிதியினுடைய மந்திராலோசனை சபைக்கு நியமிக்கப்படாமலேயிருந்துவிட்டார்கள். இப்பொழுது அக்குறையை நீக்கவும் அவ்வுயர்ந்த வேலைக்கு இந்தியர்களும் நியமிக்கப்பட உரியவர்களேயென்பதை நிதர்சனமாகக்காட்டவும், அடுத்து நேரிடும்காலிஸ்தானத்துக்கு (vacant place) ஒரு இந்தியரை மந்திரியாக நியமிக்கும்படி, மாக்ஷிமை தங்கிய சக்ரவர்த்தியவர்களுக்குச் சிபார்சு செய்யத் தீர்மானித்திருப்பதாகச் சொன்னார். இது மிகவும் ஒரு முக்கியமான சீர்திருத்தம்.

இஃதோடு, சென்னை, பம்பாய் இராஜதானி கவர்ன்மெண்டுகளின் எக்ஸிகியூடிவ் கௌன்ஸிலிலும் (Executive Council) ஒவ்வொரு இந்தியர் இருக்க வேண்டியதற்காக இப்பொழுதுள்ள இரண்டு கௌன்ஸில் மெம்பர்கள் தொகையை நாலுவரையில் அதிகமாகச் செய்யப்பார்லிமெந்து சட்டம் செய்யத்தீர்மானித்திருக்கிறார்கள். அன்றி, பெங்கால், பஞ்சாப், முதலிய உதவி கவர்னர்கள் ஆளுகைக்குட்பட்ட மாகாணங்களுக்கு இப்பொழுது மந்திராலோசனை சபையில்லாதகுறையைநீக்கி அவற்றிற்குஇரண்டுகௌன்ஸில் மெம்பர்கள் கொண்ட மந்திராலோசனைசபை ஏற்படுத்தப்படவும், அச்சபையில் ஒருவர் இந்தியராகவிருக்கவும் ஏற்பாடு செய்யத் தீர்மானித் திருக்கிறார்கள். இம்மாறுபாடுகளெல்லாம் மிகவும் முக்கியமானவைகள். ஏனெனில் இச்சீர்த்திருத்தத்தால், இந்தியர்கள் கவர்னர் இராஜப்பிரதிநிதி யிந்தஇரண்டு வேலைகள் தவிர மற்ற எல்லாவேலைகளுக்கும் நியமிக்கப்பட லாயக்கானவர்களென்று ஏற்பட்டு விடுகிறது. ஹைகோர்ட்டு ஜட்ஜாக இந்தியர்கள்நியமிக்கப்பட்டிருப்பதில் அவர்கள் சீப்ஜஸ்டிஸ் ஸ்தானத்திலும் சிலகாலம் ஆக்டிங்காகவேலைபார்த்துவர நேரிட்டு வருவதுபோல், ஒரு அவசரகாலங்களில், இந்தியர்கள் கவர்னர் பதவியிலும் சொற்பகாலமேனும் ஆக்டிங்காகவிருக்க நேரிடக்கூடுவது சாத்தியமாகவிருக்கிறது. யாரோ ஒரு இந்தியர் மந்திராலோசனைசபைமெம்பராக நியமிக்கப்பட்டால் அதனால் என்ன பிரமாதம்வந்து விட்டது என்று தெரியாதவர்கள் நினைக்கலாம். அப்படியல்ல! இந்தியர்கள் கௌன்ஸில்மெம்பர்ஸ்தானத்துக்கு லாயக்கானவர்களென்று ஒப்புக்கொள்வதன்றி அந்த வேலைக்கு நியமிக்கப்பட்டும் வரும்பக்ஷத்தில் இந்தியர்களுடையநிலைமையும்அந்தஸ்தும் ஒருபடியேறினதாகவேயாகும். ஏனென்றால் ஜாதிவர்ணபேதத்தினாலுண்டாயிருந்த ஒரு தாழ்ச்சி நீங்கி, நம்தேசத்தில் நாம் எல்லாவேலைக்கும் நியமிக்கப்பட அருகராயிருக்கிறோம் என்கிற மனோதிடத்தினால் வரும் கௌரவம் அற்பமாக நினைக்கத்தக்கதில்லை. ஆகையால் இது மிகவும் மேலானதும் சிலாக்கியமானதுமான ஒரு சீர்திருத்தமே. இதனால்வரும் லாபம் ஒரு பெரிதல்ல. ஒரு பெரிய கொள்கை இதனால் நன்றாக ஸ்தாபிக்கப்படலாகிறது மிகவும் முக்கியம். இந்த முக்கிய சீர்திருத்தத்திற்குப் பிறகு சட்டநிரூபணசபைகளின் சீர்திருத்தம் மிக முக்கியமானது.

இதுவரையில் சட்டநிரூபணசபைகளுக்கு மெம்பர்கள் எலெக்ஷன் மூலமாக நியமிக்கப்பட்டதில்லை. இப்பொழுது நடந்துவரும் "சட்டநிரூபணசபை மெம்பர் எலெக்ஷன்கள்" உண்மையான எலெக்ஷன்களாகமாட்டா. ஏனெனில் மெம்பர்கள் எலெக்ஷனில் தெரிந்தெடுக்கப்பட்ட மாத்திரத்தினாலே மெம்பர்களாகவர பாத்தியமில்லை. எலெக்ஷன்மூலமாகத்தெரிந்தெடுக்கப்பட்டவரை சட்டநிரூபணசபை மெம்பர் ஸ்தானத்துக்குநியமிக்கப்படத்தக்கவராகச் சிபார்சுசெய்யமட்டும் பாத்தியதையே யன்றி, "நாங்கள் இவரைத் தெரிந்தெடுத்திருக்கிறோம்; ஆகையால் இவர்சட்ட நிரூபணசபை மெம்பராகவரப்பாத்தியதையுள்ளவராய் விட்டார்" என்று ஸ்வதந்திரம் பாராட்ட வழியில்லை. இப்பொழுது நேர்எலெக்ஷன் மூலமாக மெம்பர்கள் நியமிக்கப்பட ஏற்பாடு செய்யத் தீர்மானித்திருக்கிறார்கள். அன்றி, சட்டநிரூபண சபை மெம்பர்களை அதிகமாகப்பெருக்கவும் தீர்மானித்திருக்கிறார்கள். சென்னை இராஜதானி சட்டநிரூபணச்சபைக்கு கவர்னரையன்றி 43-மெம்பர்கள்அதிகமாக நியமிக்கப்படுவார்கள். இவர்களில்பாதிப்பேர்எலெக்ஷன் மூலமாக நியமிக்கப்படுவார்கள். மற்றவர்கள் கவர்ன்மெண்டாரால் நியமிக்கப் படுவார்கள். இதுவரையில் சட்டநிரூபண சபையில் பெரும்பாலர் (Mojority) உத்தியோகஸ்தர்

களாகவே யிருந்து வந்தார்கள். இனிமேல், இராஜப்பிரதிநிதி யவர்களுடைய சட்டநிருபண சபையிலன்றி மற்ற இராஜதானி சட்டநிருபண சபைகளிலெல்லாம் பெரும்பாலர் உத்தியோகஸ்தர்களாக விருக்க வேண்டுமென்கிற நிபந்தனையை ஒழித்து விட்டதுமன்றி, உத்தியோகஸ்தரல்லாதவர்களே பெரும்பான்மையாகவுமிருப்பார்கள். இராஜப்பிரதிநிதி சட்டநிருபணசபையில் மட்டும் பெரும்பாலர் உத்தியோகஸ்தர்களாகவே யிருப்பார்கள். அச்சபைமெம்பர்களின் தொகை 63 ஆக உயர்த்தப்படும்.

இப்பொழுது சட்ட நிருபணசபைமெம்பர்கள் ஏதாவது ஒரு மசோதா ஆலோசனையிலிருந்தால் அது விஷயமாகமட்டும் பேசலாமன்றி, பொது விஷயங்களைப்பற்றிப் பிரஸ்தாபித்துப் பேசித் தீர்மானம் செய்ய அதிகாரமில்லை. அந்த அதிகாரக்குறைவைநீக்கி சட்டநிருபணசபைமெம்பர்கள் பிரஸிடெண்டினுடையஅதிகாரத்துக்குட்பட்டு, பொதுவிஷயங்களைப்பற்றியும், பொதுவாக ஜனங்கள்சிரத்தையெடுத்துக் கொள்ளத்தக்க முக்கியவிஷயங்களைப்பற்றியும் பிரஸ்தாபித்துப் பேசித் தர்க்கம் விளைப்பதுமட்டுமன்றி தீர்மானங்களும் செய்யலாமென்று ஏற்படுத்தப் போகிறார்கள். ஆனால் இந்தத் தீர்மானங்கள் கவர்ன்மெண்டார் ஒப்புக்கொண்டு அந்தப்படி நடக்கச் சம்மதித்தாலன்றி மற்றப்படி அவர்களைக் கட்டுப்படுத்தாவாம். இதனால் பொதுஜன அபிப்பிராயம் இன்னதென்று கவர்ன்மெண்டார் சங்கையறத் தெரிந்துகொள்ள வழியுண்டாய் விடுகிறது. பொதுஜன அபிப்பிராயத்தை மீறி நடக்க கவர்ன்மெண்டாருக்கு அதிகாரமிருந்தாலும், அவர்கள் பொதுஜன அபிப்பிராயத்துக்கு விரோதமாக நடக்கப் போதுமான நியாயமிருந்தாலன்றி அப்படி அதற்கு விரோதமாக நடக்கத்துணியாரென்பது நிச்சயம். துணிந்தாலும் தங்கள் நடத்தைதான் சரியென்று ஸ்தாபிக்க காரணங்கள் கூறவேண்டியவர்களா யிருப்பார்கள். இப்பொழுது சட்டநிருபணசபையில்கேள்விகள் கேட்டால் கவர்ன்மெண்டார் ஏதாவது ஒன்றை இதுதான் அதற்குபதில்என்றுசொல்லிவிட்டால், கேள்விகேட்டவர் மறுபடியும் வாய்திறக்க வழியில்லை. இனிமேல் கேட்ட கேள்விக்குச் சரியான ஜவாப்பு வராவிட்டால் கேள்விமேல் கேள்விபோட பாத்தியமுண்டு என்று ஏற்படுத்தப் போகிறார்கள். ஆனால் இச்சுதந்திரம் கௌன்ஸில் ப்ரெஸிடெண்டினுடைய அதிகாரவரம்புக்குட்பட்டதாயிருக்கும். இப்பொழுது கௌன்ஸில் மெம்பர்கள் ப்ரெஸிடெண்டு ஸ்தானத்தை வகிக்கலாமென்றிருப்பதை சட்டப்படி யொருமெம்பர் ப்ரெஸிடெண்டாக அக்கிராசனத்தை வகிக்கலாமென்று ஏற்படுத்தத் தீர்மானித்திருக்கிறார்கள்.

இந்த சீர்திருத்தங்களெல்லாம் இப்பொழுது ஒரு மசோதாவாகத் தயார்செய்து பார்லிமெந்துசபை திறந்ததும் (பிப்ரவரி ௴ 16௳ திறக்கிறது) ஆலோசனைக்குக்கொண்டு வர சித்தமாக வைத்திருக்கிறார்கள்.

பார்லிமெந்து சபைதிறந்து அரசர் அனுப்பிய சமாசாரத்துக்கு பதிலாக "அட்ரேஸ்" அனுப்பவேண்டியகாரியம் முடிந்ததும், உடனே இந்தியாகவர்ன்மெண்டு சீர்திருத்த மசோதா பார்லிமெந்து சபையில் ஆலோசனைக்குக் கொண்வரப்படுமென்றி, லார்ட் மார்லியவர்கள் வாக்குறுதி செய்திருக்கிறார். அம்மசோதா பார்லிமெந்துசபையில் சட்டமாகப் பாஸானதும் அமுலுக்குவரும். ஆனால் லார்ட்ஸ்சபையில் சிலர் இதற்கு விரோதம் செய்யத்தீர்மானித்திருப்பதாக ஒரு வதந்தியுலாவுகிறது. அவர்களால் எந்தமட்டும் இடையூறு நேரிடுமோ இப்பொழுது சொல்வதி சாத்தியமாகவில்லை. போகப்போகத்தான் தெரியவேண்டும். "இந்தியன் கௌன்ஸில் மசோதா" ஒன்று இப்பொழுது பார்லிமெண்டு லார்ட்ஸ் சபைமுன் ஆலோசனைக்கு வந்திருக்கிறது.

## HIS I. MAJESTY ON INDIAN REFORMS.

## இந்தியா சீர்திருத்தங்களைப்பற்றி மாக்ஷிமைதங்கிய நமது சக்ரவர்த்தியவர்கள் பேசியது.

"The reception ofthe measurss designed by my Government for improving the indian administration has given me deep satisfaction. A Bill will be at once laid before you dealing with the matters to which sanction is required, and it is my strong desire that the steps to be taken for giving effect to the poiicy announced in my messsage of November to the princes and people of Innia may impartially protect the interests and advance the welfare of all races, classes and communities of my Indian dominions."— His I Majesty's speech from the Throne.

இந்த மீ 16வ பார்லிமெந்து சபை மறுபடியும் கூடிற்று. அந்தமஹாசபை முதல் முதல் கூடும்பொழுது, அரசர் அச்சபை மெம்பர்களை நோக்கி அவர்கள் கவனிக்க வேண்டிய முக்கியவிஷயங்களைப்பற்றிப் பேசுவது வழக்கம். அப்படியே இப்பொழுதும் பேசினதில், இந்தியாவில் செய்யப் பிரேரேபித்திருக்கும் துரைத்தன சீர்திருத்தங்களைப் பற்றிப் பின்வருமாறு பிரஸ்தாபித்துப் பேசினார். "இந்திய துரைத்தன முறையைச் சீர்திருத்துவதற்காக நமது கவர்ன்மெண்டால் தயார்செய்யப்பட்ட ஏற்பாடுகள் எல்லாருக்கும் அங்கீகாரமா யிருப்பதைப்பற்றி மிகவும் திருப்தி யடைந்திருக்கிறேன். அச்சீர்திருத்தங்களில் பார்லிமெந்து சபையாருடைய அனுமதி வேண்டிய பாகங்களை ஒரு மசோதாவாகத் தயார்செய்து உடனே தங்களுடைய ஆலோசனைக்குக் கொண்டுவரப்படும். சென்ற நவம்பர் மாசத்தில் இந்தியா ஜனங்களுக்கும் சிற்றரசர்களுக்கும் நாம் அனுப்பிய சந்தோஷ முகமன்பத்திரிகையில் குறித்தசீர்திருத்தஏற்பாடுகளை அமுலுக்குக்கொண்டு வருவதற்கான ஏற்பாடுகளை உடனே செய்யவேண்டுமென்பது என்னுடைய அத்யந்த விருப்பமாயிருக்கிறது. அச்சீர்திருத்தங்கள் நம்முடைய இந்தியா இராஜ்யத்திலுள்ள எல்லாஜாதியார்கள் வகுப்பார்களுடைய நன்மையையும்நாடி அவர்கள் க்ஷேமத்தையும் பக்ஷபாதகமின்றி முன்னுக்குக் கொண்டுவருவதா யிருக்க வேண்டுமென்பது என்னுடைய கோரிக்கை.



## THE INSTITUTION OF MARRIAGE AS IT IS.

## தற்காலகலியாண நிலைமை.

(*Communicated.*)

"தை பிறந்தால் தானே கலியாணமாகிறது" என்பது பழமொழி. பெற்றோர் பிரம்மப்பிரயத்தனம் செய்தும் சுலபமாய் முடியாத கலியாணம் மேற்சொன்ன பழமொழி யுண்டானகாலத்துக்கு ஏற்றதேயன்றி யிக்காலத்துக்குபயோகமாகா வெறுமொழியே. பெண்குழந்தைகளைப் பெற்றோர்க்கு மனசஞ்சலத்தையும், பிள்ளையைப் பெற்றோர்க்கு குதூகலத்தையும் விளைக்கிறது தைமாதம். நிரக்ஷரகுக்ஷியாய், குரூபியாயிருப்பானொரு பையனுக்கும் பெண் கொடுக்கிறேனென்று ஒருதகப்பன் விசாரிக்கத் தலைப்படுகிறான். தன் மகனுக்கு ஒருநாளும் கலியாணமாகாதென்று நினைத்திருந்த இப்பையனைப்பெற்ற புண்ணியவான், சமயம்வாய்த்ததென்று தனக்குத் தெரிந்த மிடுக்குகளைச் செய்ய வாரம்பிக்கின்றான். "எதையா, என்குழந்தை சிறுபையல், இப்பொழுதுதான் பதினாறுவயதாகிறது, இந்தவருஷம் நாலாவதிலிருந்து ஐந்தாவது பாரத்துக்கு பிரமோஷன் ஆயிருக்கிறது; சிறுபிராயத்திலேயே கலியாணம் பண்ணி பையன்தலையில் சுமையையேற்றிவைப்பதில்

எனக்கு இஷ்டமில்லை; ஏதாகிலும் பி. ஏ, பி. எல், பரிக்ஷையாவது தேறினால் நல்லது என்று யோசிக்கிறேன். இது எல்லாம் கிடக்கட்டுமென்றாலும், இருக்கிற கடனைத் தீர்த்தன்றோ கலியாணம் பண்ண யோசிக்கவேண்டும் நான். மேலைக்குப் பார்த்துக் கொள்ளுவோம்''.—என்று நிச்சிந்தையாய் சொல்லுகிறான். இதில் எவ்வளவு நிசம் எவ்வளவு பொய் என்பது சாதாரணமாய் லோகரூடியை அநுபவித்தவர்கட்கு நன்கு விளங்கும். பையன்களுக்கு கலியாணகாலங்களிலும் உத்தியோககாலங்களிலும் வயது பின்னேசெல்ல வாரம்பிக்கிறது. அதாவது, 20 வயதுக்காரன் கலியாணகாலத்தில் 16 வயதினவனாய்விடுகிறான். இதேமாதிரியாக 25-30 வயதுக்காரன் உத்தியோகமாகும் தருவாயில் 22,23 பிராயத்தானை சிறுவனாய்விடுகிறான். மேற்சொன்னபிள்ளையின் பிதா,கலியாணமாகாதேயென்று ஏங்கியிருந்தகாலத்தில், தன் பிள்ளைக்கும் பெண் கொடுக்க வந்தார்களே, எப்படியாவது, ஆயிரம்பொய் சொல்லியாவது கலியாணத்தை முடித்து விடலாமென்று யோசித்து விட்டார்.

'பையனுக்கு 20 வயது ஆய்விட்டதே என்று யோசித்து பெண்ணைக்கொடுக்க கூசுவார்களோ? என், 16 வயதாயிற்று என்று சொன்னால்தான் என்ன, அவர்கள் கண்டார்களா, அதுதான் நல்லது.' என்று அவர் மனதில் எண்ணங்கள் ஜனித்தன.

இந்தக்காலத்தில் பிள்ளைகள் மெட்ரிகுலேஷன் கிளாஸ்வரையில் சரசரவென்று ஏறிவந்துவிடுவது சுலபம். 1880—1885 வருஷங்களில் முதல்கிளாசிலிருந்து இரண்டாவது கிளாஸுக்கு பிரமோஷனுக வேண்டுமானால் சர்க்கார் பரீக்ஷையொன்று பாஸ்செய்ய வேண்டும்; அதுபோலவே இரண்டாவதிலிருந்து மூன்றாவதுக்குப் போவதானால் மற்றொருபரிக்ஷை பாஸ்செய்யவேண்டும்; இப்படி மெட்ரிகுலேஷன்வரையும் படிப்படியாகவே ஏறவேண்டியிருந்தது. பையன்கள் சுலபமாய் மெட்ரிகுலேஷன் கிளாஸில் வரமுடியாதிருந்தது. அப்பொழுது "பையன் மெட்ரிகுலேஷனில் வாசிக்கிறான், இந்தத்தடவை பரிக்ஷைக்குப் பணங்கட்டியிருக்கிறான்'' என்றால், அவன் படிப்படியாய் கஷ்டப்பட்டு மேலேறி வந்தவனென்றும், இப்பொழுதும் இதுவரையிலும் போல பரீக்ஷை தேறுவானென்றும் நிச்சயமாய் அர்த்தமாய்க்கொண்டிருந்தது. இந்நாட்களிலோ, முதல்கிளாஸ்முதல் ஆறாவதுபாரம் வரையில் 'லயன் கிளீயர்' கொடுத்துவிட்டிருக்கிறபடியால், தேறுகிறபிள்ளையும், உருப்படாப்பிள்ளையும் ஒன்றுபோலவே சரசரவென்று ஏறிவந்துவிடலாம். இரண்டு பேர்களும் 'மெட்ரிகுலேஷன் கிளாஸிலிருக்கிறான்' என்றுதான் சொல்லப்படுவார்கள். ஆனால் ஒருவன் தேறக்கூடியவன், மற்றவன் பலகாரணங்கட்காய் 'மெட்ரிகுலேஷனில் வாசிக்கிறான்' என்னும் வார்த்தையை அபேக்ஷித்து அங்கு தங்கியிருக்கிறான். அவைகளில் முக்கியமானது என்னவென்றால், பையனுக்குக் கலியாணகாலத்தில் "வயதாயிற்றே, பிள்ளையென்ன வாசிக்கிறான்?'' என்று கேட்கிறவர்களுக்கு என்னபதில் சொல்லுகிறது? ஒரு மெட்ரிகுலேஷன் கிளாஸிலாவது வாசிக்கிறானென்றால்லவோ நன்றாயிருக்கும்; கொடுக்கிறவர்களும், பெண்ணை நல்ல இடத்தில் கொடுத்தோமென்று எண்ணிக் கொண்டு கொடுப்பார்கள்'' என்னும் கருத்தை யுடையவர்களாய்ப் பிள்ளையை "அப்பா! கலியாணமாகிற வரையிலாவது பள்ளிக் கூடத்துக்குப் போய்க் கொண்டிருடா, இல்லாதுபோனால் தக்க இடத்துப் பெண்ணைக் கொடுக்கமாட்டார்களடா! நீ வாசிக்கவேண்டாம், சும்மாவாவது அங்கேபோய் உட்கார்ந்து விட்டுவாடா, அப்பா'' என்று மன்றாடி அனுப்பப்பட்டவனாயிருக்கிறான். "ஓடுமீனோட ஒருமீன் வருமளவும் வாடியிருக்கு மாங்கொக்கு'' என்பதுபோல, ஒவ்வொருத்தராய் வருகிற பெண்பெற்ற கிரஹஸ்தர்கட்கு வெவ்வேறு காரண

ங்கள் சொல்லியனுப்பி விட்டு, "தக்க இடம கப்பட்டதும்" உடனே "பேசித்தீர்த்து" கலியாணம் செய்துவிடுகிறார்கள். இப்படி கலியாணங்கள் நடக்குமிக்காலத்திலா "தை பிறந்தால் தானே கலியாணமாகும்"?.

மேற்கூறிய நம்பையன் பிதாவாகிய மகான், நாம் முன்னமேயே சொன்னபடி நம்பையனுக்கு சிறுவயதென்றும், பதினாறுவது பிராயத்தில் நாலாவதிலிருந்து ஐந்தாவது பாரத்துக்கு பிரமோஷனு யிருக்கிறதென்றும், பையன் ஒரு பி-ஏ, பி-எல், லாவது பியாஸ் செய்யவேண்டு மென்றும், கடனும் அடைத்துவிட வேண்டுமென்றும் விருதாவாய்ச் சொன்னவரல்லர். இக்காருண்ணியவானுடைய எண்ணம் இன்னளில் எல்லோருக்கும் விசதமாய்விளங்கக்கூடியதுதான். அதாவது, வயதுசென்ற நம்பையனை, வந்தவர் வெகு சிறுபிராயத்தான் என்று எண்ண வேண்டுமென்று பதினறு பிராயமென்றார். ஐயோ! பதினறு பிராயத்துக்கு நாலாவதிலிருந்து ஐந்தாவதற்கு பிரமோஷனைது வெகு ஆச்சரியகரமான வித்தையொன்று மில்லையென்பது இந்த பிராமணருக்குத் தெரியாது. வந்தவன் புத்திசாலி யானதினல் எளிதில் வரனுடைய புத்தி தீக்ஷண்ணியத்தை அறிந்து கொள்ளுகிறான். நாலிலிருந்து ஐந்தாவது பாரத்துக்கு பிரமோஷன் ஆயிற்று எனவே, அதற்குத் தக்கபடி, பெண்ணைப் பெறத் துர்ப்பாக்கியப் பட்டவன் வரதக்ஷிணை கொடுக்கவேண்டுமென்பது அர்த்தம். இந்தக்காலத்தில் சந்தையில் மாடுகளுக்கு விலையேற்பட்டுவிட்டதுபோலவும், ஷாப்புகளில் கடியாரம், கண்ணாடி சாமான்கள் முதலியவைகளின் கழுத்தில் ஒரு காகிதச் சீட்டில் அவைகளின் விலைகளை முறையே எழுதி ஒரு கயிற்றில் கோர்த்து கட்டியிருப்பதுபோலவும், தரம்வாரி, பையன்களென்னும் கலியாண கடைச்சாமான்களுக்கும் "லேபில்" எழுதி ஒட்டிப்போட்டிருக்கிறது. விலையின் விவரம் சுமார் அடியில் வருமாறு இருக்கும். அபேக்ஷைப்பட்டவர்கள் அவரவர்கள் யோக்கியதானுசாரமாய் தேடி எடுத்துக்கொள்ளலாம்:—

(1.) குலம், கோத்திரம், முதலியன நல்லவை; பையன் கண்ணுக்கு லக்ஷணமாயிருக்கிறான்; பிராயம் 15; மெட்ரிகுலேஷனுக்கு வாசிக்கிறான்; சரீரஸ்திதி நன்றாயிருக்கிறது. தகப்பனார் எக்சிகூடிவ் இஞ்ஜினிர். ஆக ஆறு லக்ஷணங்களையுடையவன்; லக்ஷணம் ஒவ்வொன்றுக்கு ஒவ்வொரு ஆயிரம்,-மொத்தம் 6000 ரூபா விலை.

(2.) மேற்படி லக்ஷணங்களில் முதல் ஐந்து மட்டுமேஉள்ளன. கடைசிய துமாத்திரமில்லை; தகப்பனார் வியவசாய அந்தஸ்துள்ளவர்; சொத்து நிரம்பக்கிடையாது; அன்னவஸ்திரங்களுக்குக் காணும். விலை 2000 ரூபா.

எனவே, சொத்து அதிகமாயிருக்க, பெண் கொடுப்போரிடமிருந்து மேன்மேலும் பரிக்க வேண்டுமென்பது ஒருவித "ரூல்" ஆய்விட்டிருக்கிறது. இதைப்பற்றி கீழே விவரமாய்ப் பின்னும்எழுதுவோம்.

(3.) மேற்படி லக்ஷணங்களில் ஒவ்வொன்று குறைந்து வந்தால் ஒவ்வொரு ஆயிரம் ரூபாய் குறைத்துவிடவேண்டும். என்! கணக்கு எவ்வளவு சுலபமாயிருக்கிறது! எப்பேர்ப்பட்ட முட்டாளும் அறியக்கூடியதாயில்லை? இவைகிடக்க,

(4.) பரீக்ஷைகள் ஒவ்வொன் றதிகமாய் பியாஸ் ஆயிருந்தால்; பரீக்ஷைஒன்றுக்கு ரூ. 1000 உயர்த்தவேண்டும்; அதெப்படி-என்றால், முதலிற்சொன்ன பையன் மெட்ரிகுலேஷனல்லாமல் 18 வயதில் பி. ஏ. தேறியிருந்தால் அவனுக்கு விலை ரூபாய் பதினயிரமாவும் கொடுப்பார்கள்—அல்ல, கொடுக்கச் செய்யப்டுவார்கள்! இது நிற்க.

"நம்மபயல் பி. ஏ, பிஎல் பியாஸ் செய்ய வேணுமென்று நம்ம பிராமணன் ஏன்சொன்

னாரென்றால், தம்பிள்ளைக்கு வந்தவர் பெண்ணையும் கொடுத்து, தம்மகத்துக்குக் கூட்டிச் சென்று, கலியாணத்துக்காக பதினாறாவது வயதையடைந்த—ஏன், இவன் கலியாணமாகாதவனால் என்றும் பதினாறுவயதுக்காரனே!—20 பிராயத்தனான நாலாவதிலிருந்து ஐந்தாவதற்கு பிரமோஷன் செய்யப்பெற்ற புத்திசாலியை படிக்கவைத்து, என்றைக்கும் சொப்பனத்திலும் இவனால் தேற ஒண்ணா இப்பரிக்ஷைகளை தேறவைக்கவெண்டுமாம். பிள்ளைபெற்றதற்குத் தகப்பன், பெண்பெற்றவனிடம் 1000, 2000 வழிப்பறிசெய்வது போதாதென்று, தன் பிள்ளையாகிய கல்லுப்பிள்ளையரர் பரிக்ஷை தேறும்பொருட்டாக, சமுத்திரத்திலிறைத்தாற்போல மறுபடியும் பணத்தை பாழாக்கவேணுமாம்; ஆகவே, இம்மகான் தாம்பிள்ளைபடைத்ததற்காக ஒரு கூலிவாங்கிக்கொண்டு, தம்மகனைப் பிறனுக்கு விற்றுவிட்டு, மேலும் மேலும் தமக்கும் தம்பையனுக்கும், சம்பந்தியிடமிருந்து எப்படி பணம் தட்டலாமென்று பார்த்திருக்கிறான். என்ன நிஸ்கண்டத்தனம்! லோகம் என்ன ஸ்திதிக்கு வந்துவிட்டதுபாருங்கள்! தாது வருஷத்து க்ஷாமத்தில் காப்பாற்றமுடியாது போனபின்பு சில ஈனசாதியார் தங்கள் குழந்தைகளை விற்றுவிட்டனராம். அப்படி கஷ்டதசையில் செய்ததைக்கூட நினைக்கில் அவர்கள் மனம்பதறுமாம். அப்படி ஒருக்காலத்திலிருந்த ஜனங்களில் உயர்ந்தசாதியென்று புகழ்ப்பட்ட பிராமணர்கள், நல்லஸ்திதியிலிருக்கையிலேயே, தாம் அருமையாப் பெற்றுவளர்த்தபிள்ளைகளை ஏனையா இலஜ்ஜையின்றி விற்கிறார்கள்? ஏன்! இது தெரியாதோ! நான் சொல்லுகிறேன், கேளுமையா: அப்போதெல்லாம் 'மக்கட்பேற்றிற்பெரும்பேறில்லை' என்றிருந்தது பழமொழி; இக்காலத்தார் இங்கிலீஷ்முதலியது வாசித்து குழந்தை பிறத்தல் வெகு தொந்திரவு, அவை பிறக்காதிருக்கவேண்டும், நாம் அப்பொழுது சுகமே வாழலாமென்று, தான் என்னும் பிரதாபமே முன்னிட்டுக்கொண்டு 'மக்கட்பேற்றிற் பெருங்கேடில்லை' என்றும்,

"குழலினிதி யாழினிதென்பர் தம்மக்கள்
மழலைச்சொற்கேளாதவர்"

என்பதைச் சலிப்புடன்

குழலினிதுயாழினிதென்பர் தம்மக்கள்
மழலைச்சொற்கேட்டோய்ந்தவர்'

என்று மாற்றி, குழந்தைகளென்றால் ஆசூயைப்படுகிற மகான்களுக்கு 'அவைகளை எப்படியாவது, ஒப்படைத்தால் சரி' என்று தோன்றிவிடுகிறது. இதிருக்கட்டும். நாமறிய, நம் பாட்டன்மார்கள் பெற்ற குழந்தைகளெவ்வளவு, நாம் பெறும் மக்கள் எவ்வளவு? அவர்கள் சாதாரணமாய் 7—8, சிற்சிலர் 10 வரையும், குழந்தைகளைப் பெற்று அவைகளை நல்ல இடங்களில் கலியாணஞ்செய்து கொடுத்தும் செய்து கொண்டும் நன்றாய் வாழவில்லையா? "ஆமாம் அந்த நாளெல்லாம் சுபிக்ஷமாயிருந்தது. அப்பொழுது நானும் வாழ்ந்திருந்தால் எனக்கும் தாராளமாய்க் குழந்தைகளிருக்கத்தான் செய்யும். இப்பொழுது ஒருகுழந்தைக்குக் கலியாணமென்றால், 1000, 2000 கொடுக்கவேண்டியிருக்கிறதே" என்கிறார். இதனையெல்லாம் கேட்ட ஒருவர். "சரி, அப்படியானால், நீரும் உம்முடைய பெண்களுக்காக வரதக்ஷிணை கொடுக்கவேண்டாம். உம்முடைய பிள்ளைகளையும் விற்காதேயும்" என்று சொல்வதில்லையே! "ஆமாம், இருந்தாற்போலிருந்து கலியாண விஷயத்தில்ஏன் இவ்வளவு கஷ்டம் வந்துவிட்டிருக்கிறது?" "ஏனா! சொல்லுகிறேன். அட கிடக்கட்டும். நீங்கள் ஜட்காவண்டிக்காரன்களைப் பார்த்திருக்கிறீர்களா?

"ஏ, ஜட்கா, எழும்பூருக்கு வாரயா, அப்பேன்? ஏய், என்னபேசல்லே? வர்ரயா இல்லையா சொல்லு!"

"முக்காரு [illegible] க்கிறயா சாமி!"

"என்ன! திருவல்லிக்கேணியிலிருந்து எழும்பூருக்கா! எப்போதாவது, உன் ஜன்மாந்தரத்திலே பன்னிரண்டணா வாங்கியிருக்கிறயா? ஏதாவது சுமாராய் கேளப்பேன்"

"ஏன்சாமி! காங்கிரஸிலே மூணு ரூபாக்கி கூட போயிருக்குசாமி, அப்படி நினைச்சுடாதே சாமி, இஷ்டமிருந்தாக்க, பத்து அணா குடு."

"போ, போ, எனக்கு ஒன்றும் ரயிலவசரமில்லை, நான் மெள்ளபோனால், காரியம் ஒன்றும் கெட்டுப்போகாது. கொஞ்சநேரம் நின்னா, டிராம்வண்டி வருது, ஏறிக்கிண்டுபோறேன், நீஒன்றும் முறுக்கவேண்டாம், போ!"

"சாமி, சாமீ, எட்டணாதான் குடுப்பியா? ஏளணா? கடக்கட்டும் உனக்காக ஆறணா, இல்லாத போனால் போய்யா!"

"சாமி, சாமீ, அவன் கிடக்கிறான், எங்குதிரையைப்பார் சாமி; அடே கழுதே கிழுதே எல்லாங் கட்டிக்கிட்டுவந்துட்டு, நம்மய்யருக்கிட்டே ஆறணா கேக்கறயாடா; நம்ம வண்டியிலேறுங்கசாமி, அந்த ஆறணா இங்கே குடுங்கசாமி,—"

"போடா, போடா, மூணணா! சம்மதமானால் ஓட்டிக்கிண்டுவா, இல்லையானால் போ!"

"என்னசாமி, போறே? வாய்யா, நாலணா தான்."

"வாண்டாம், வாண்டாம்."
"வாசாமி, மூணணாதான்."

"சாமி சாமீ நான் முதல்லே கேட்டேன், நான் அந்த மூணணாக்கு விடறேன் சாமி, அய்யரே, வா அய்யரே!"

அய்யருக்கு அவசரம்போலிருக்கிறது, நம்முடைய வண்டி ஒன்றுதானிருக்கிறது, இப்பொழுது என்னபணம் கேட்டபோதிலும் கொடுத்துத்தான் தீரவேண்டியது என்று எண்ணின ஜட்கா வண்டிக்காரனுக்கு முதல் முதல் பேசுவதுகூட கஷ்டமாயிருந்தது. பிறகு அவர் தனக்கொரு அவசரமுமில்லை என்று வெட்டென தெரிவித்ததும், சுரம் விட்டுப் போயிற்று, "முக்காரூபா" விலிருந்தவன் "ஆறணா" வுக்கு இறங்கிவிட்டான். பின்னும் மற்றொருவண்டி வந்துவிடவே மளமளவென்று மூன்றணாவுக்கு இறங்கிவிட்டது. அதுபோல, "ஐயோ, குழந்தை மீனாக்ஷிக்கு 10-வயதாகிறது, என்னசெய்யறது, தக்க வரன் அம்புடல்லையே" என்று பல்லவிபாடும் தன் மனைவியின், தங்கை தமக்கைகளின், வார்த்தைகளைப் பிரதிதினம் கேட்டு பயந்திருக்கும், ஒருவர் "எப்படியாவது மேலை வருஷம் சித்திரையீ குழந்தைக்குக் கலியாணம் பண்ணி மறுகாரியம்பார்க்க வேணும். இனி ஒரு க்ஷணம் சும்மாவிருக்கக்கூடாது" என்று நிச்சயித்து வரன் தேடப்போகிறார். இதுதான் சமயம், இவருக்கவசரம், அடுத்தவருஷம் கலியாணம் பண்ணியே தீரவேண்டும் என்றுஇருக்கிறபடியால், கேட்டதுகொடுத்துத் தானே தீரவேண்டும், பார்த்துக்கொள்வோம்" என்று துணிந்து, 1000, 2000 கொண்டுவா என்று கேட்கத் தலைப்படுகிறான் பிள்ளை வீட்டுக்காரன். அப்படியல்லாமல் "பெண்ணுக்கு வயது ஆறாகிறது, வரன் இப்போபிடிச்சு பார்க்கவேணும், என்கிறவனிடம் வரன் வீட்டுக்காரர்கள் பேசுவதேயில்லை. அப்படி பேசினாலும், "இப்போஎன்னஅவசரம்"—அவசரமில்லாவிட்டால் நிச்சயப் படுத்திக்கொள்ளக் கூடத் தடையுண்டோ தெரியவில்லை. கொட்டுவாயில் வைத்துக்கொண்டுதான் பேசவேண்டுமோ!—, "குழந்தைகள் பெரிசாகட்டும் பேசிக்குவோம்" என்று விடுகிறார்கள்.

அவசரம், அவசரமில்லை என்பதில் தான் இவ்வளவு கஷ்ட சௌகரியங்கள் இருக்கின்றன என்று நன்றாய்த் தெரிந்திருக்கையிலுங்கூட ஒரு தர்ம வியவஸ்தை செய்யத்துணிய நம்மவர்கட்கு முடியவில்லையே! சுமார் 485-வருஷங்களுக்கு முன்னமே விஜயநகரத்தரசனாகிய பிரதாபதேவராயமகாராயர் காலத்தில் படைவீட்டு ராஜ்யத்து அசேஷவித்துவத் ஜனங்கள்கூடி ஒருவியவ

ஸ்னித செய்தார்கள். அது அடியில்வருமாறு காணப்படுகிறது:—

"சுபமஸ்து, ஸ்வஸ்தி ஸ்ரீமன் மகா இராஜாதிராஜ பரமேசுவரான ஸ்ரீவீரபிரதாபதேவமஹாராஜர் பிருதிவீராஜ்யம் பண்ணியருளாநின்ற சகாப்தம் 1347-ன்மேல் செல்லாநின்ற விச்வாவஸு வருஷம் பங்குனிமாசம் உ க்கு ஷஷ்டியும், புதன்கிழமையும்பெற்ற அநிஷத்துநாள்; படைவீட்டு இராஜ்யத்து அசேஷவித்வத் மஹா ஜனங்களும் அர்க்க புஷ்கரணிகோபிநாதன் ஸந்நிதியிலே தர்ம்ம ஸ்தாபந ஸமயபத்திரம் பண்ணிகுடுத்தபடி; இற்றைநாள் முதலாக இந்தப் படைவீட்டு ராஜ்யத்து ப்ராஹ்மணரில் கன்னடிகர், தமிழர், தெலிங்கர், லாடர்முதலான அசேஷ கோத்திரத்து அசேஷ சூத்திரத்தில், அசேஷ சாகையிலவர்களும் விவாஹம் பண்ணுமிடத்து கன்னியாதானமாக விவாகம் பண்ணக்கடவராகவும். கன்னியாதானமாக விவாகம் பண்ணுமல் பொருள் வாங்கிப் பெண்குடுத்தால், பொண்குடுத்து விவாகம் பண்ணினல் இராஜதண்டத்துக்கும் உட்பட்டு பிராம்மண்ணியத்துக்கும் புறம்பாகக் கடவதென்று பண்ணின தர்ம ஸ்தாபனசமய பத்திரம். இப்படிக்கு அசேஷவித்வத் மகா ஜனங்கள் எழுத்து" என்பதுசாஸனம்.

இது விரிஞ்சிபுரத்து கோயிலின்முன்கோபுரத்துசுவரில்வெட்டப்பட்டிருக்கிறது. இதனல்அக்காலத்தில்பெண்கள்கிடைப்பது அரிதாயிருந்ததென்றும்; அதற்காக, வெகுபணம் செலவிட்டு கலியாணம் செய்துவந்தார்களென்றும், அது வெகு கொடுமைகளை விளைத்து வந்தது ஆதலால் அக்கொடுமைகளை நீக்க தர்ம்மஸமயஸ்தாபனம் செய்யவேண்டுமென்று வித்வத் ஜனங்கள் ஒன்றுகூடி கன்னிகாதான மன்றி, பொன்னுக்குப் பெண் குடுக்கக்கூடாதென்று வியவஸ்தை செய்ததோடுகூட, அரசனிடத்திலும்தெரியப்படுத்தி, இதற்குவிரோதம்செய்தவனை ராஜதண்டனைக்குட்படுத்தி, தாங்களும் அன்னேனை ஜாதிபிரஷ்டம்செய்தார்கள். அவ்வாறு துணிவுடன் பொதுநன்மைக்கு உழைத்த வித்வத் மகாஜனங்கள் இப்பொழுது எங்கேபோனர்கள்? அவர்களுடைய சந்ததியர்களான நாம் இவ்வளவு இழிந்தஸ்திதிக்கு வந்துவிட்டோமே! நம்மில் நால்வர்சேர்ந்து ஒரு வியவஸ்தையாவது செய்யயோக்கியதையற்றவர்களாயிருக்கிறோமே! நமக்கே நம்மனிதர்களின் நடத்தை, நம் ஐக்கியத்தால் அடக்கமுடியாவிடின், அரசர்களை தர்ம்மஸ்தாபனஞ் செய் என்று எங்ஙனங்கேட்கலாம்? அதிலும் இக்காலத்தில் நம்மதவிஷயங்களில் எவ்விதமாயும் புகுந்து கெடுதிசெய்யமாட்டோமென்று உறுதிமொழிதந்திருக்கும் இங்கிலீஷ் ராஜாங்கத்தார், நம் பிரயத்தினத்தினலல்லாமல், தாமே எங்ஙனம் நமக்காக தர்ம்மஸ்தாபனஞ் செய்யத்துணிவார்கள். "ஓ! அவன் மூன்று தினம் கிருஸ்தவனயிருந்து இப்பொழுது சாதியில்வந்து சேர்கிறேன் என்கிறுன், அவனைச்சேர்த்துக்கொள்ளப்படாது; அப்படிசெய்வார்களை நாம் சாதிபிப்ரஷ்டம்செய்வோம்" என்னும் நம்மவர்கள், திருடி, கொலைசெய்து, துகாதகாரியங்களையெல்லாம் அமரச்செய்து, ஜெயிலுக்குப்போனவனை எவ்வாறு ஒருசிறிய பிராயச்சித்தம் செய்து சேர்த்துக்கொண்டு வருகிறுர்களோ அறியோம். சாதிப்பிரஷ்டம் செய்வோம் என்பவர்கள் சத்விஷயத்தில் செய்யச்சமர்த்திலரோ? பிள்ளைவீட்டுக்காரன் பெண்வீட்டுக்காரனிடம் அனியாயமான சீர்வரிசைகளைக் கேட்பானுனல் அவன்சாதிக்குப் புறம்பாவனென்ன என் தைரியமெழவில்லை? மூன்றுமாதத்துச் சம்பளத்தைப் பாதக்காணிக்கையாக கொடுக்கமாட்டாத கிரகஸ்தனை பஹிஷ்காரம் போடுவேனென்னும் கருணைநிதிகளான ஸ்வாமிகளின் பலம் இவ்விஷயங்களை சீர்படுத்துவதில் அபலமாகிவிடுகிறதே? இம்மகான்களெல்லாம் எதுக்கு ஏற்பட்டார்கள்?

“ இந்தவகையில்லாதமனிதனைக் காசினியிலேன் படைத்தாய், கருதுதாயுதரமும் பார்க்கின்றவர்களிருகண்களும்செய்தவினையோ!” என்று கவிகதறுவதைப்போல இப்பெரியவர்களைக் கண்டு பரிதபிக்கவேண்டித்தானிருக்கிறது. சாஸ்திரவித்துக்கள் கூடி வியவஸ்தைகள் செய்யமுடியாவிட்டால், சாஸ்திரீகமான விஷயங்களையாவது ஒப்புக்கொள்ளலாமே. அதாவது பெண்களுக்கு கலியாணம் ஐச்சிகம், ருது ஆவதற்கு முந்தியே கலியாணம் கழிக்கவேண்டுமென்பது அசாஸ்திரியம். ருது ஆனபின்னும் விவாகம் செய்யலாம் என்று ஒப்புக்கொண்டுவிடின், அவசரம் என்பது நீங்கிவிடுகிறது. ஜட்காவண்டிக்காரன் மிடுக்கு ஒடுங்கினதுபோல பையனை வைத்துக்கொண்டிருக்கிறவர்களும் ஒருவாறு அடங்குவார்கள். அதையாவது செய்யின், நம்மவர்கட்கு க்ஷேமங்கிடைக்கும். க்ஷாமம், வியாதி முதலான பலவிதகஷ்டங்கட் குட்பட்ட நம்மவர்கள், ஜனசமூகத்தின் மௌட்டிகத்துக்கும் உள்பட்டுப் பாடுபடவும் வேண்டுமோ?

அன்றியும்மற்றொன்றையும்கவனிப்போம். ராமஸ்வாமி அய்யர்; கிருஷ்ணய்யர், கோபாலய்யர் என்று மூன்றுபெயர்களிருப்பதாகக் கொள்ளுவோம். இவர்கள் மூவர்களுக்கும் ஒவ்வொருவர்க்கும்ஒருபிள்ளையும் ஒருபெண்ணுமிருப்பதாகவும் வைத்துக் கொள்ளுவோம். இப்பொழுது ர்மஸவாமி அய்யர் தம்மகனுக்கு கிருஷ்ணய்பரிடம் 2000 ரூபா வாங்கிக்கொண்டு அவர்பெண்ணைக் கலியாணம் செய்துவைத்து பையனை கிருஷ்ணய்யர் வீட்டுக்கனுப்பிவிடுகிறார்; தம்மகளை கோபாலய்யர் மகனுக்குக் கொடுத்து 2000 ரூபாயுங் கொடுத்து, தன்னகத்தில் கொண்டுவைத்துக்கொள்கிறார்.

இதுபோலவே, கிருஷ்ணய்யர் தம் பிள்ளையைகோபாலய்யருக்குக்கொடுத்து, 2000ரூபாயைப் பெற்றுக்கொள்ளுகிறார். பையன் கோபாலய்யர் அகத்துக்குப் போய் விடுகிறான்.

அதாவது, மேற்சொன்னவைகள் அடியில் காண்பித் திருப்பதுபோல நடக்கிறது:—

இராமசாமிஅய்யர் கிருஷ்ணய்யர் கோபாலய்யர்.




கலியாணத்திற்குப்பின் இராமசாமிஅய்யரகத்தில் கோபாலய்யர் பிள்ளையும், கோபாலய்யரகத்தில் கிருஷ்ணய்யர் பிள்ளையும் வளர்க்கப்பட்டுவருகிறார்கள். கலியாண விஷயத்தில் ஒவ்வொருவருக்கும் ஒரேசெலவு ; இராமசாமிஅய்யருக்கு பெண்கலியாணத்துக்காக கைவிட்டுப்போனது 2000ரூபா, பிள்ளைகலியாணத்தில் வந்தது ரூ. 2000; பாக்கி, தம்மகன் பிறர்வீட்டுக்குப் போய்விட்டு பிறர்மகன் தம் வீட்டில் வளர்கிறான்; இதேமாதிரியாகவே மற்றவர்கள் விஷயமும். இப்படி செய்யாமல் அவரவர்பணத்தை அவரவரேவைத்துக்கொண்டுதத்தம்மக்களைத்தத்தம்கிரகங்களிலேயே வளர்த்து, பெண்கள்பெரியவர்களானபின் அவரவர்கள் புக்ககத்துக்கனுப்பி சுகமேயிருக்கச் செய்யக்கூடாதோ? ஏன் வேதநாயகம் பிள்ளை பணத்தை யிகழ்ந்து கீர்த்தனை பாடமாட்டார், இவ்வளவுபெரிய கூத்தைவிளைக்குமாயின்? கலியாணவிஷயங்களில் சீர்திருந்தாத நாம் மற்றெவ்விஷயத்திலும் சீர்படநியாயமில்லை. ஆதலால் ஆன்றோர்கள் கூடிய சீக்கிரம் சீர்பாடு செய்ய முயல்வார்களாக,

கோ.

## PRACTICAL HINTS

### SESAMUM OIL—ITS USE AND CHARACTERISTICS

### எள் நெய்யும் அதன் குணகுணங்களும்.

எள்ளிலிருந்து எடுக்கப்படுவது எண்ணெய். எள்ளில் நாட்டுஎள், காட்டுஎள், பேயெள் எனமூன்றுவகையுண்டு. பேயெள் செடி ஒசூர் பங்களூர்முதலிய இடங்களில் அதிகம். அதின் பூ வட்டமாய்மஞ்சள்நிறமுள்ளதாயிருக்கும். தமிழ்நாட்டிலுண்டாகும் எள் பூ நமது மூக்கைப்போல் அடிவிரிந்து மேல் குறுகி இருக்கும்.

2. இங்கே நாம் பேசுவது நாட்டு எள்ளைப் பற்றியதேயாம். எள்ளின் சுபாவகுணம் சூடும் குளிர்ச்சியுமாம். உணவில் கொஞ்சம் சேர்ந்தால் நலமாம். சுத்தரக்தத்தை யுண்டாக்கிச் சுகத்தைக் கொடுக்கும். சொறி, சிரங்குகளின்மேல் பூசிக்கொண்டு வந்தால் தோல் மெதுவாகும். படைகள் மாறும். நுரையீரலைப்பற்றிய புண்களை ஆற்றும். சூட்டினாலுண்டாகும் இருமல் நீர்ச்சுறுக்குகளை மாற்றும். மந்தத்தை உண்டாக்கும். மூளைக்கும் தீனிப்பைக்கும் உதவாது. வண்டலைப்பற்றியநோய்களை யுண்டாக்கும். நெருப்பில் சுடவைத்து எடுத்துக்கொள்ளவேணும். பழச்சாறு காடி இவைகளோடு சேர்த்தால் குணம்செய்யும்.

3. சரீரத்தில் சூட்டையுண்டாக்கி அதனால் அங்கங்கே யுள்ள நோய்களை மாற்றும் குணம் இதற்குண்டு. ஆனால் நோயற்றதேகத்தில் அடிக்கடி பூசுவதால் சரீரஸத்தும் நரம்பின் வலுவும் குறைந்தி நேத்திரம் முதலிய அவயவங்களிலுள்ள ஒளியம்சங்களைக் கெடுத்துவிடுகின்றது. கண்ணில் நீரேற்றம் படலம் முதலிய நோய்களிருந்தால் அப்பொழுது சிரசில் எண்ணெய்தேய்த்துக்கொள்வதால் கேடொன்றும் உண்டாகாது. நோயற்ற கண்களுண்டானவர்கள் நல்லெண்ணெயை மட்டும் தேய்த்து முழுகுவதால் அதிக சூடுண்டாகி பிடரியிலிருந்து கண்ணில்வந்து கூடும் நரம்புகளுக்குத் துர்ப்பலத்தை யுண்டாக்கி கண்ணொளியைக் கெடுத்துவிடுவதால் வெள்ளெழுத்துண்டாகின்றது. சரீரத்தைச் சுகநிலையில் வைத்துக்கொண்டு நல்லெண்ணெய் தேய்த்துக் கொள்ளுவதை ஒருவர் அவருடைய முப்பதாவது வயதிலிருந்து நீக்கிவிடுவாரானால் நூறுண்டளவும் அவருக்கு வெள்ளெழுத்துண்டாகாது. இது நிச்சயம். மூலிகைரஸத்தோடு நல்லெண்ணெயைச் சேர்த்துத் தைலம் வடித்துவைத்துக் கொண்டு முழுகி வருவாரானால் அவர்களுக்கும் வெள்ளெழுத்து உண்டாகாது.

4. சரீரத்தைச் சிரசுமுதல் பாதமட்டும் அதிக சூட்டை யுண்டுபண்ணி நல்லெண்ணெய் சுத்தப்படுத்துகின்றது. மயிர்க்கால்களில் அதிக வேர்வையை உண்டுபண்ணுவதினால் நீங்கள் இதைப்பார்த்துக்கொள்ளலாம்! எண்ணெய் தேய்த்துக்கொண்ட நாள்களில் நமது நாக்கிலும் வாயிலுமுண்டாகும் வெள்ளைப் படலத்தைப் பார்த்துக் கொண்டால் சூட்டின் மிகுதி தெளிவாகும். சுரரோகமுள்ள நாள்களிலும் இந்த வெள்ளைமாசாகும் படலம் காணப்படும். அதிகச் சூடுண்டானபோது சரீரம் அதிகம் தளர்ச்சி யடைந்துவிடுகின்றது.

5. அப்பொழுது காமவிகார முண்டானாலும் அதைப் புத்திசாலிகளடக்கிக் கொள்ளவேணும். அடக்காது சம்போகம் நேர்ந்துவிட்டால் சுகஜன்னி யெனும் சடுதிநோயுண்டாகி மனிதரை நொடிப்போதில் மாய்த்துவிடுகின்றது. இதற்கும் நல்லெண்ணெயே காரணம். வெள்ளெழுத்தையும் சுகஜன்னியையும் தலைவலியையு முண்டாக்கும் துர்க்குணம் நல்லெண்ணெய்க் குண்டென்பதை ஓர் மகான் 40-ஷங்களுக்குமுன் தெரிவித்தார். அதன்படியே நல்லெண்ணெயை 30 வயது முதல் நீக்கிவிட்டு ஒருகிழவர் 65-வயதாகியும் கண்ணில் யாதொரு நோயுமின்றி

விளங்குகின்றார். வெள்ளெழுத்தும் அவரைக் கிட்ட அஞ்சி விலகிவிட்டது.

6. உலகில் பெரியோர் மனிதர்களின் குணங்களைமட்டும் எடுத்துப்பேசித் துர்க்குணங்களை மறைத்து வைப்பதுபோல் பதார்த்தகுண சிந்தாமணியெனும் நூலாசிரியரும் நல்லெண்ணெயின் குணத்தை மட்டும் கூறிவிட்டு துர்க்குணத்தைக் கூறாது விட்டு விட்டார்.

### பதார்த்தகுண சிந்தாமணி.

### எள்ளின் நெய்க்குணம்.

வெண்பா.

புத்திநய னக்குளிர்ச்சி பூரிப்புமெய்ப்புளகம்
சத்துவங் காந்தி தனியிளமை—மெத்தவுண்டாம்
கண்ணோய் செவிநோய் கபாலஅழல் காசநோய்
புண்ணோய்போ மெண்ணெயாற் போற்று. (க)

### எண்ணெய் அன்னத்தின்குணம்.

வெண்பா.

எண்ணெயுஞ்சோறுமுண்ணி லென்றைக்குமாபலமா
பெண்ணுக் கிளையாத பீடுமுறும்—நண்ணுகின்ற [ம்
வாதகப மேகம்போ மாருப்பசி யெழுப்பும்
பூதலத்துள் நாளும் புகல். (உ)

7. முடிபுரை.—நல்லெண்ணெயில் குணம் சில, அதனாலுண்டாகும்தீங்கு பல. நோயுள்ள சரீரத்திற்கு அது சில சமயங்களில் மருந்தாய் நலந்தரும். மற்ற சுகசரீரிகளுக்கு விஷமாய்த் தீமை விளைக்கும். நோயற்ற வாழ்வைக் கருதுவார் நல்லெண்ணெயின் குணகுணங்களை நன்கு ஆராய்ந்து கொண்டு அதனைக் கையாடவேண்டும். நல்ல பாம்பு மந்திரத்திற் கட்டுப்படும். அதுபோல் நல்லெண்ணெய்விவேகிகளுக்குக் கட்டுப்பட்டுக் குணம் தரும். பாம்பின் விஷத்தை நொடிக்குள்பரவும்படிச்செய்வது நல்லெண்ணெயே. சரீரத்தளர்ச்சியாலேதான் விஷம் விரைவில் பரவுகின்றது.

---

## COCOANUT OIL—ITS USE AND CHARACTERISTICS

## தேங்காய் எண்ணெய்

இங்கு தேங்காயெண்ணெயின் குணகுணங்களைக் கூறுவதும் நம்மவர் சுகவாழ்க்கைக்குப் பயன்படும்.

குணம்:—சூடும். வரட்சியும்.

பிரயோசனம்:—உணவிற் கதிகம் சேர்க்கலாம்.

சௌக்கியம்:—சுத்த ரத்தமுண்டாம். தாதுவிளையும்; இடுப்புவலி, கீல்வாதம், பாரிச வாயுக்களைக் கண்டிக்கும். ஈரலுக்கு வலுவைக் கொடுக்கும். உள்புண்களையும், மூலத்தையும் மாற்றும். வாய்நாற்றத்தைநீக்கும். வழுக்கையிற்கற்கண்டு சேர்த்துச் சாப்பிடில் மூலச்சூடு நீங்கும். விந்துவிளையும். இளநீரில் கொத்துமல்லிவறுத்துப்பொடியை ஊறவைத்துக் குடிக்க நீர்த்தாரையிலொழுகும் உதிரம் நின்றுவிடும். முற்றின தேங்காய்ப்பால் சுகபேதியையுண்டாக்கும். கொப்பரையில் பசுந்தழைசேர்த்து அரைத்துமேலே பூசசொறி தினவு முதலியவை நீங்கும். நெல்லோடு சேர்த்து வேகவைத்து குழந்தைகளுக்குக் கொடுக்கில் வயிற்றிலுள்ளகிருமிகள் நீங்கும். இந்தத் தைலத்தினால் புத்தி அதிகரிக்கும். இடுப்புவலி மூலவலி இவைகள் நீங்கும்.

2. சூட்டுடம்பிற் காகாது. அதிகமானால் நெஞ்செரிப்பு, ஒக்காளம் உண்டாகும். எலுமிச்சம்பழரசம் முதலிய புளிப்புள்ள பதார்த்தங்களோடுசேரில் குணமாம்.

3. தேங்காய் எண்ணெயில் குணம் அதிகம் அகுணம்மட்டு. நல்லெண்ணெயிலோ குணக்கேடு அதிகம். குணம்கொஞ்சம்.

4. சரீரசுபாவம்.—நோயற்றநிலை, நோயுள்ள நிலை, சீதஉஷ்ணநிலை, நாட்டின்நிலை, காலநிலை, வயது, இவைகளைச் சோதித்தறிந்து கொண்டே ஒருபொருளின் குணகுணங்களை நிதானித்தறிதல் வேண்டும்.

இங்ஙனம்.
தி. வேங்கடராம ஐயங்கார்.

## Agricultural Notes.

TOBACCO CULTIVATION AROUND TANJORE.

### தஞ்சையின் சுற்றுப்பக்கங்களிலுள்ள புகையிலைச் சாகுபடிமுறை.

புகையிலையானது சிறுபோதையும் காரமும் உள்ள ஓர் இலை. இது பசுமையில் பல மருந்திற்கும், பாடஞ்செய்தபின் பச்சையாகவும் வாட்டியும், தகித்தும் பலவாறு உபயோகப்புட்டு அழிவதால் பயிரிடுவோர்க்குப் பலன் தருகிறது.

இது ஆதியில் குவீன் எலிஸெபெத் காலத்தில் (Queen Elzabeth) வர்ஜீனியாவிலிருந்து (Verginea) ஸர் வால்ட்டர் ராலி (Sir Walter Raleigh) என்பவரால் இங்கு கொண்டுவரப்பட்டது என்று சொல்லப்படுகிறதாயினும், இத்தஞ்சை ஜில்லாவில் வேதாரண்யம், சிவபுரி, பழுவூர், திருவையார், கபிஸ்தலம் முதலான இடங்களில் சாகுபடி செய்யப்பட்டு வருகிறது.

நிலத்தின் தகுதி:—பசுந்தாள் எருக்கட்டுள்ள உதிர்மணற்பாங்கு இதற்குரித்தானது. காஞ்சந்தழைபோன்ற பசுந்தாள் எரு இலகுவாய்க் கிடைக்கக்கூடிய திருமுல்லைவாயிலை ஒத்த இடம் இதற்கு மெத்த நலம்.

நாற்றங்கால் பண்படுத்தல்:—தழை மடிசல் மாமடிசல் இவைகளால் உண்டாகும் "உறமண்" ஆட்டெரு இவைகளை ஆயத்தம் செய்துகொண்டு நாற்றங்காலைக் கொத்தி ஒத்தடிசெய்து ஒன்றரைமுழச் சதுரமுள்ள பாத்திகள்கட்டி உறமண்கலந்து ஒருமுறை கையால் உழுதுவிடவேண்டியது.

விதையிடல்:—விதையை மணல் அல்லது உறமண்ணுடன் கலந்து சீராகத்தெளித்து, பாத்திகளைத் தும்சுபோட்டு கெட்டிப்படுத்தவேண்டியது. பிறகு வைக்கோல் முதலானவற்றால் மூட்டம்போட்டுத் தண்ணீர் ஊற்றவும்.

மூட்டம் பிரித்தல்:—எட்டுநாள் சென்றபின் மூட்டம்பிரித்து,—

நிலத்தின்செய்கால்:—ஆட்டெரு பசுந்தாள் எருமுதலான எருவிட்டுப் பண்படுத்தப்பட்ட நிலத்தில் இரண்டு அடிச் சதுரத்திற்கு 4-கன்றுகள்விதம் நடவேண்டும்.

கன்று நடும்விதம்:—நடுவதில் அரை அங்குல ஆழம் குழிசெய்து கன்றை நட்டு வேர் மூடும்படி மண் அமுக்கி தழை மூட்டம் சொருகி வைக்கவேண்டியது.

தண்ணீர் ஊற்றல்:—காலையில் ஒரு முறையும் 12-மணிக்கு ஒருமுறையுமாக சொம்புத் தண்ணீர் பனுக்கி வரவேண்டியது. இவ்விதமாக மூன்றுநாளைக்குப் பிறகு 15-நாளைக்கு காலைத்தண்ணீர் ஊற்றியும் மறு 15-நாளைக்கு மாலைத்தண்ணீர் ஊற்றவும் வேண்டும்.

மண் அணைத்தல்:—தண்ணீர் இறைக்க பாத்திகட்டியவுடன் மண்சுரண்டி கன்னுக்கு மண் அணைத்து தண்ணீர் காயக்காய இறைத்து வரவேண்டும்.

குழை எடுத்தல்:—கன்று நட்ட 5-ம்நாள் குழைமூட்டம் எடுத்துவிடவேண்டும்.

கொழுந்து கிள்ளல்:—எட்டு இலைகள் உண்டானவுடன் தலைக்கொழுந்து கிள்ளிவிடவேண்டியது. மூன்றுமுறைக்குக் குறையாமல் இலைகளுக் கிடையில் கிளைக்கொழுந்து கிளைக்காமல் கிள்ளிவரவேண்டியது.

மரம்வெட்டும் பக்குவம்:—தலைக்கொழுந்து கிள்ளிய சுமார் 42-நாளைக்குப்பிறகு வெயில் வேளையில் ஒரு பளபளப்பாகத் தைலப்பதமும் "வராகன்புள்ளி" என்றமுதிர்ச்சி அடையாளமும் தோன்றும். இந்தப்பக்குவத்தில் அடியோடு வெட்டித் தலைகிழாகத் தரையில் கவிழ்த்துவிடவேண்டும்.

பிரித்தடுக்குதல், தலைகீழாக் கட்டல்:—மறுநாள் காலையில் எடுத்து அடுக்கி இவ்வாறு 4-நாள் மாலையில் பிரித்துவிட்டும் காலையில் எடுத்தடுக்கியும் ஆனபிறகு, 5-ம் நாள் மரத்திலிருக்கும் சத்து இலைக்கு ஏறும்படியாக தலைகீழாகத் தூக்கிக்கட்டி பாதிமரம்காயும் வரையில் பார்த்துவரவேண்டியது.

பாரம்போடல்,காம்பரிந்துகத்தைகட்டல்:— கட்டியிருப்பதை அவிழ்த்துக் காற்றடர்த்தியான இடத்தில் தலைமாற்றி அடுக்கிப் பாரம் போட்டு ஒருவாரத்திற்குப்பிறகு காம்பரிந்துகத்தை கட்டவேண்டியது.

குறிப்பு:—எட்டுநாளைக்கு ஒருமுறை பிரித்து அடைத்துவரவேண்டியது.

மூக்குத்தூள் புகையிலைக்குரிய சில பக்குவம்:—தலைகீழாகத் தூக்கிக்கட்டிய பதமானது கலகலக்கக் காய்ந்தபின் அவிழ்த்துக் காம்பரிந்து அடுக்கி ஒரு முறை பாரம்போட்டுப் பிறகு பாரம் போடாமல் அடைத்து 8 நாளைக் கொருமுறை பிரித்து அடுக்கவேண்டும்.

குறிப்பு:—இதற்குரியபசுந்தாள் எருகிடைக்கக்கூடிய காட்டின் சவுகரியமும் நிலப்பாங்கின் பொருத்தமும் அமைந்த திருமுல்லைவாயிலை ஒத்த பல இடங்களை உத்தேசித்து எனது ஸ்வயானுபவத்தை 1908௵த்திய தஞ்சை வித்தியா பொருட்காட்சி வெளியுலா மனோபிவிர்த்தி (Excursion Note) யில் குறிப்பிக்கப்பட்டபடி

மு. முத்துக்குமாரசாமி பிள்ளை.



## "BRIDEGROOM—HUNTING"

## OR, THE LOST IDEAL.

"God is the Bride or Bridegroom of the Soul. Heaven is not the pairing of two, but the communion of all souls. We meet and dwell an instant under the temple of one thought, and part as though we parted not, to join another thought in other fellowships of joy."—*Emerson.*

"Every thing that is good is fair, and the fair is not without measure, and the animal who is fair may be supposed to have measure. Now, we perceive lesser symmetries and comprehend them but about the highest and greatest we have no understanding, for there is no symmetry greater than that of the soul to the body. This, however we do not perceive, nor do we allow ourselves to reflect that when a weaker or lesser frame is the vehicle of a great and mighty soul, or, conversely, when a little soul is incased in a large body, then the whole animal be not fair, for it is defective in the most important of all symmetries: but the fair mind in the fair body will be the fairest and loveliest to him who has the seeing eye."—*Plato.*

ஓம் லலிதாம்பாயைநம:

## "மாப்பிள்ளை தேடல்"

அல்லது

## காணாமற்போன கட்டழகன்.

(ஸ்ரீஸத்யானந்த சாந்த சர்மா எழுதியது.)

### I. மாப்பிள்ளை அழகு.

"அழகெனப்படுவது அருள்வெளித்தோற்றம்."

"மாப்பிள்ளை" என்றால் என்ன? சாதாரணமாக சாமான்யஜனங்கள் தம் கண்மணியாம் பெண்மணி வரித்த புருஷனை "மாப்பிள்ளை" யென்று சொல்கிறார்கள். "மா" என்பது மஹா என்னும் வடமொழியின் திரிபு. உதாரணம்: "மஹாமகம்" என்னும் வடமொழி "மாமகம்" என்று தமிழில் திரிந்து வழங்கும். மஹா என்கிற சப்தம் பெரிய என்னும் பொருளை யுணர்த்தும். மஹத் என்னும் தத்துவத்திற்குப் "பெரிய மனசு" என்று பொருள்படும். அதற்கு மாறுபெயர் புத்தி. பெரிய மனசுள்ளவர்களுக்குத்தான் புத்தியுண்டு. புத்தியுள்ளவர்கள் பெரியமனசுள்ளவர்களாவார்கள் என்பது வாஸ்தவம். புத்தி யென்றால் பகுத்தறிதலுக்கு மட்டும் சொல்வது வழக்கம். பகுத்தறிதல் புத்தியின் சின்னவேலைகளிலொன்று. பகுத்தறிதல் பேதபுத்தியாம்: அது விஷயஞானத்துக்கே யுரியது. "விஷயம்" என்பது புலனறிவுக்கு எட்டுவது. புலனறிவுக்கெட்டுவதாயுள்ள நாமரூபப் பிரபஞ்சமாம் இது, பஞ்சீகரண விதிப்படி பஞ்சபூதங்களின் சேர்க்கையால் உண்டானதால், பஞ்சபூதங்களின் சேர்க்கையைப்பிரித்துப் (பகுத்து) அறியலாம். இதுதான் பகுத்தறிவு. ஆனால்அபஞ்சீகரணதத்துவங்களான தன்மாத்திரைகளைப் பிரித்தறிவதெப்படி? பொறி புலன்களெல்லாம், பூதபௌதிகங்களைப்போலவே இந்தப் பஞ்சதன்மாத்திரைகளின் குணவேறுபாட்டினால் உண்டானவையாக விருப்பதால், அவையெல்லாம் அவைக்குக் காரணமாகிய இவற்றுள் (இந்தப்பஞ்சதன்மாத்திரையுள்) ஒடு

ங்கி அடங்கி நிற்கும். தாய்க்குள் சிசுபோல், தன்மாத்திரைக்குள் ஒடுங்கி அடங்கியிருக்கும் பொறிபுலன்கள், அவற்றிற்கு உற்பத்தி காரணமான தன்மாத்திரைகளைக் காண்பது எப்படி? கூடாமையேயாம். ஆனால் தாயறியாச் சூலில்லைபோல், காரணம்அறியாக் காரியமில்லை. தன்மாத்திரைகளுக்குள் ஐம்பொறிகளும் தொழிலின்றித் தம் குணமாத்திரமாகத் தனித்திருக்கும். தொழிலின்றி, அதாவது, இயக்கமின்றிக் கிரகிக்கும் சக்தி சூக்ஷ்மாதி சூக்ஷ்மமாய் இருப்பதால்தான் "கண்ணின்றிக் காண்பானவன்; காதின்றிக் கேட்பானவன்; ஒன்றுமின்றிஎல்லாம்செய்வான்" என்கிற சுருதிவாக்கியம் பிறக்கலாயிற்று. தன்மாத்திரைகளுள் சேதனாசேதனப்பிரபஞ்சங்களெல்லாம் எப்படி அடக்கமோ, அப்படியே இந்தத் தன்மாத்திரைகள் அகங்கார தத்துவத்துக்குள் அடங்கி யொடுங்கும். திரிவிதமான அகங்காரமும் ஒன்றுக்குள் ஒன்றாக அடங்கிக் கடைசியில் அது அதற்குக் காரணபூதமான "மஹத்" தத்துவத்தி லடங்கி யொடுங்கும். இந்த மஹத் தத்துவமும் அவ்யக்தத்தில் ஒடுங்கி மறையும். ஆகவே, வியக்த சிருஷ்டிக்கெல்லாம் காரணம் மஹத் என்னும் பேர்பெற்ற புத்தி தத்துவம் என்றேற்படுகிறதல்லவா? இந்த மஹத் என்னும் புத்தி வியக்தமான பிரபஞ்சத்துக் கெல்லாம் காரணமாயிருப்பதால், இது பஹிர்முகப் பார்வையால் வரும் பகுத்தறிவுள்ளதாயின்றி, அந்தர்முகப் பார்வைஅல்லது அஹமுகப்பார்வையால்வரும் புகுந்தறிவதாம் பூர்ண அறிவுள்ளதாயிருக்கிறது. பகுத்தறியும் அறிவு பின்னமாயிருக்கும்; ஆதலினாலேயே அது பூர்ணப் பார்வையில்லை. ("We see in part dimly as through a glass)" என்றார் ஸெயின்ட் பால் என்னும் அருளாளரும். பகுத்தறிவு எப்போதும் அரைகுறைப்பார்வையே. இதற்குப் பேதபுத்தி யென்றபெயர். பூர்ண அறிவாம் புத்தி அல்லது மஹத் தத்துவம் எல்லாவற்றிற்கும் காரணமாயிருப்பதுபற்றி எதிலும் புகுந்து பார்க்கும் சக்தியுள்ளதாயிருப்பதால், அது விஷயங்களைத் தனக்கு அந்நியமாயறியாமல், தன்னிலும் வேறல்லாத தனது வியக்தாகாரவிகாரங்களாக அறிகின்றது. ஆதலால் அதற்கு அபேதபுத்தி யென்றுபேர். அபேதபுத்தி ஐக்கியத்தை யுண்டுபண்ணுவதால் மோக்ஷத்துக்குக் காரணம். பேதபுத்தி பிரிவினையையுண்டு பண்ணுவதால் பெந்தத்துக்குக் காரணமாயிருக்கிறது. நான், எனது என்னும் அகங்கார மமகார விர்த்திப்பிரவாகமாக விளங்குவது பெந்தத்தைத்தரும் பேதபுத்தி. "எல்லாம் நீ, எல்லாம் உனது, நானும் நீயே" யென்று ஜீவேசுவரஐக்கியத்தைநாடுவது அபேதபுத்தி. மனிதன் சேதனாசேதனப் பிரபஞ்சங்களிரண்டுக்கும் எஜமானாயிருப்பதால், அவன் பேதபுத்தியால் அசேதனமாம் வெளிப் பிரபஞ்சத்தை யாராய்ந்து, அதற்கு மூலமாய் சேதனரூபமாயிருக்கும் அதன் மூலப் பிரதீகபாவத்தை உட்பிரபஞ்சமாம் தனக்குள் அறிந்து கொள்கிறான். இந்தஅறிவு வளர வளர அவனுக்கு.அபேதபுத்திஜனித்து பேதமாத்தோன்றும் பலவற்றையும் ஒன்றுபடுத்தி அவற்றிற்கெல்லாம் அபேதமான காரணத்தில் லயிக்கச்செய்து அவற்றின் ஒருமையை (ஒன்றாம் தன்மையை) உள்ளத்தில் உணர்கிறான்.

இப்படி உணர உணர, உணர்வுவிசாலித்து அறிவுபரந்து, அபேதபுத்தி ஜனித்து வளர்ந்து வடவிருக்ஷமாய்த் தழைக்க, அம்மரத்திற்கு மூலமாய் அதன் நீழலில் அறிவே யுருவாய்க்கொண்டு விளங்கும் குருமூர்த்த சுந்தரராம் தக்ஷிணாமூர்த்தியைத் தரிசிக்கும் பாக்கியம்பெறுகிறான். குருதரிசனம்சித்திக்கவும், அவர் மேல்வழி காட்டுவாராக, அவன் உலக வழக்கையும், மானிடர் மயக்கையும் விட்டொழித்து, விரக்தி வைராக்கியம் பூண்டவனாய், உண்மையை யறியவேண்டு மென்கிற அத்தியாத்மதாபம் மேலெழுந்து தஹிக்கத் தபித்து, ஹிருதயத்தில் பற்றிய ஆசாபாசங்களெல்லாம் உலர்ந்து காய்ந்து, தீர்ந்தபோக, சம்ஸாரவிருக்ஷத்திற் குறிகுறியான அசுவத்த

விருக்ஷத்தின் காய்ந்து விழுந்துபோன சுள்ளிகளாம் ஸமித்தைப்பொறுக்கிக் கையில்வைத்துக்கொண்டு, "ஸமித்பாணி"—ஸமித் எந்திய கையனாய் குருவையடைந்து, தனது அத்தியாத்ம தாபத்தின் தன்மையைத் தெரிவித்து, அறிவகலஅருள்சுரக்கக் கடாக்ஷவீக்ஷணியம் செய்யவேண்டுமென்று குறையிரந்து நிற்கிறான். குருவினுடைய கடாக்ஷவீக்ஷணியத்தால் குருவருள் பெற்ற சற்சிஷன் குரு வழிப்பட்டு நடக்க ஆத்மதரிசனமுண்டாகி அப்பியாசமுதிர்ச்சி விசேஷத்தால், ஆத்மதரிசனம் மறையாமல் தானே மஹத்ரூபியாய் எல்லாவற்றிலும் புகுந்துபார்க்கும் தன்மை வாய்ந்ததன்றி, அவைக்கெல்லாம் ஆதாரபூதமாயிருக்கும் சத்ரூப ஆத்மா தானே யென்றுணர்ந்து உணர்ந்ததையுணர்ந்தபடி சித்விலாஸத்தாலறிந்து, அறிந்தநிலையில் அறிவுகெடாது அறிவுருவாய் மிஞ்சி நிற்பவனாகிறான். அப்படியானவன் யாரோ அவனே மஹாத்மா. மஹத் தத்துவத்தையாசிரயித்துப் புத்திரூபமாய், புத்திமயமாயிருந்து, எல்லாவற்றிலும் புகுந்துள்ள அந்தர்யாமியாய் இருப்பவன் யாரோ அவனே மஹாத்மா. "பிரம்மவித்து" என்று சொல்வதுபோல், இந்த மஹத் ரூப புத்தி சித்திக்கப்பெற்றவன் மஹான். "மனம் என்னும் பேர்விட்டு மஹத் என்னும் பேர் கொள்" என்றான் என்தாய். பூர்வ வாசனையால் இதற்குவேண்டிய ஸம்ஸ்காரம் அமையப்பெற்று, சாதனாப்பியாசத்தால் அந்த ஸம்ஸ்காரம் மொட்டில் வாசனைபோல் மூடியிருப்பது, மலரின் மணம்போல் பிரத்தியக்ஷமாக விளங்கச் செய்யக்கூடியவன் யாரோ அவன் மஹாத்மாவாகக்கூடியபிள்ளை. அதைச் சுருங்கச்சொல்லும் பொழுது மஹத்பிள்ளை மஹாபிள்ளை, மாப்பிள்ளை, யென்று குறுகி விகாரப்பட்டு விளங்கும்.

இப்படிப்பட்ட சத்குண சம்பன்னனான சற்பாத்திரத்திற்கே, கன்னிகையைக் கொடுப்பதாம் கன்னிகாதானம் உரியது. இதரர்களுக்குக்கன்னிகையைக் கொடுப்பவன் அபாத்திரனுக்குக் கொடுத்த பாபத்தைக் கட்டிக்கொண்டு, அவன் செய்யும் பாபகிருத்தியங்களுக்கெல்லாம் பாத்திரனாகி, அதற்குக் காரணபூதனா யிருக்குங் காரணத்தினால் அவனிலும் கொடிய பாபியாகிறான்.

உண்மையான விவாகஞ் செய்துகொண்டு உள்ளன்பு நிறைந்து காதல் மனையாளோடு கருத்தொருமித்துக் கலந்து இல்லறம்புரிந்து புண்ணியகுமாரத்தியைப் பெற்ற ஒவ்வொரு புமானும், இப்படிப்பட்ட "மஹாத்மாவாகக் கூடிய பிள்ளை" யைத்தேடி, அவனை மஹாத்மாவாகவே உள்ளத்துணர்வால் உணர்ந்து பூஜித்துக் கால்கழுவி, அர்க்கியபாத்திய முதலிய சோடசோபசாரங்களும் செய்து, தன் கண்மணியொத்த அருமையான பெண்மணியை அவனுக்கு இல்லறக்கிழத்தியாக விருந்து நல்லறஞ்செய்யத் துணைநிற்கும்படி, பெற்றோரிருவரும் மனங்கலந்து குமாரத்தியைப் பெற்றதுபோல், இப்பொழுது மனங்கலந்து ஏகீபாவத்தி லீடுபட்ட எண்ணமுடையராய், கன்னிகையின் கைபிடித்து ஸ்வர்ண புஷ்ப பல சகிதமாய் அவனுக்குத் தத்தம் செய்து "பாணிக்கிரஹணம்" செய்துகொடுக்கவேண்டும்... அதாவது, குழந்தையைத்தர்மபத்நியாகக் கைப்பற்றச்செய்து கொடுக்கவேண்டும். இதுதான் பெற்றோர் புத்திரிக்குச் செய்கடன். கைப்பற்றின பெண்ணை உத்தமவரன் அக்னிசாக்ஷியாகவும் பிராம்மணர்கள் (பிரஹ்மத்தை யறிந்தவர்கள்) சாக்ஷியாகவும், ஆகமவிதிப்படி (அதாவது, யந்திரதந்திரமந்திரானுஷ்டானங்களுடன்) "இல்லறமல்லது நல்லறமல்ல" வென்றுகூறிய ஆப்தவாக்கியத்தையனுஷ்டித்தும் தனக்கு இல்லறக்கிழத்தியாக்கிக்கொள்கிறான் இதுதான் விவாஹம். இது உயர்குலத்திற் பிறந்தபெண்களுக்குரியதோர் உத்தம ஸம்ஸ்காரம். ஆண்பிள்ளைகளுக்குப் பிரம்மசரியம்எப்படியோ, அப்படியே பெண்பிள்ளைகளுக்கு விவாஹம் இந்திரிய நிக்ரஹத்துக்குரியதோர் பிரஹ்மசரியத்தை யொத்த ஆத்ம ஸம்ஸ்காரமாம்.

(இன்னும் வரும்.)

## WHY ARE WE WANTING IN INFLUENCE?

## நமக்கேன் செல்வாக்கில்லை?



சாதாரணமாய் இந்தியர்கள் தற்போதுசெல்வாக்கிழந்தவர்களா யிருக்கிறார்களென்பது பிரத்தியக்ஷம். “செல்வாக்கு” என்றால்என்ன? வாக்கு செல்வது,—வார்த்தையை யொட்டி நடத்தையும் பொருந்தியிருந்தால், அதுசெல்வாக்காகும். “அவன் வாயசைந்தால் நாடசையும்” என்று செல்வாக்குள்ளவர்களைப் பற்றிச் சொல்கிறார்களே, அப்படி யென்றால் என்ன? வாய்க்கு வாக்கினாலன்றிச் சிறப்பில்லை: வாக்குக்கு ஸத்யத்தினாலன்றிச் சிறப்பில்லை. ஆகையால் ஸத்யவான் வாயசைந்தால் மனதிலே ஒன்றை சங்கற்பித்துக்கொண்டு வாக்கினால் அதை வெளியிடுவானாகில்,—நாடசையும். அஹம்புறமிரண்டு மொத்திருப்பவனாதலால், நாட்டார் எல்லாம் அவன் சொல்லைச் சிரேஷ்டமாகக்கொண்டு அவனை ஆமோதித்து நடப்பார்கள். ஆகவே செல்வாக்குக்குக் காரணம், ஸத்யவிரதமாமென்று ஏற்படுகிறது. ஸத்யவிரத மிருப்பது லேசல்ல. மனம் வாக்கு, நடத்தை இவை வேறுபடாமல் பாதுகாப்பதே ஸத்யவிரதமாம்.

“மனஸ்யேக, வசஸ்யேக, கர்மண்யேகமஹாத்மனாம்
மனஸ்யந்யத், வசஸ்யந்யத்கர்மண்யந்யத் துராத்ம[னாம்”

என்றுள்ள ஆப்தவாக்கியத்தின் உண்மை நித்தியப்படி அனுபவத்தில் காணலாம். மனசு, வாக்கு, நடத்தை யேகமாகப் பொருந்தியிருக்கப்பெறின் அதுவே மஹாத்மாவுக்கு லக்ஷணமாம். மஹத் என்னும் தத்துவத்தோடொன்றுபட்டவனாதலால், அவன் வாயசைந்தால், நாடசையக் கேட்பானேன்?

மனவினால் நினைப்பதொன்றும், வாக்கினால் சொல்வதொன்றும், காரியத்தில் நடந்துகொள்வதொன்றுமாக, இப்படி திரிகரணமும் திரிவிதமாய் பேதப்பட்டு நிற்கும் துராத்மாவாகிய துஷ்டனுக்குச் செல்வாக்கு என்னமாக உண்டாகும்? அறியாச்சனங்களை மருட்டி யுருட்டி, அர்பத்நட். வாசாமஹோசரமாய்ப் பேசிவிட்டுக் கடைசியில் கழுநீர்ப்பானையில் விழுந்த கவுளிபோல், மானமிழந்து, மரியாதையிழந்து, ஊரிழந்து, பேரிழந்து, பழிபாவத்துக்காளாகப் பழிச்சொல்லுக்கிடமாய் நிற்பதே மனமொழிமெய் சுத்தமின்றிப் பொய்பித்தலாட்டம்செய்து வயிறு வளர்ப்பவன் கதியாம். இவனைப் பிழைத்திருப்பவனாகச் சொல்வது சொல்லிழுக்கேயாம். இவன் செய்யும் பொய்பித்தலாட்டங்களைப் பிழைக்கும்வழி யென்று கருதுவதும் பெருங் குற்றமேயாம். ப்ரோபேஸ்ஸர் லீஸ்ஸ்மித் என்னும் வர்த்தகவியாபாரக்கைத்தொழில் வித்யாவிற்பன்னர், பம்பாய் கவர்ன்மெண்டாரின் வேண்டுகோளின்பேரில் இந்தியாவுக்குப் பிழைக்கும்வழி காட்டிப் பிரசங்கங்கள் செய்து வந்ததின்முடிவில் இந்தியர்களுக்குஹிதபோதமானதோர் கட்டுரை கழன்று சென்றார். அஃதென்னவெனில்:—

“இந்தியர்களுக்கு வேண்டியதா யிருக்கும் குறை யென்னவெனில், தன்னில் நம்பிக்கையும், தமரில் நம்பிக்கையும். தன்னில் நம்பிக்கையில்லாதவனுக்குத் தைரியமில்லை. தமரில் நம்பிக்கை யில்லாதவன் நாகரிகவிருத்திக்கருகனாகான். (தன்னம்பிக்கை ஆத்மபுத்தியாலும், தமர் நம்பிக்கை ஸ்வயநயம் பாராட்டாப் பரசேவையாலுமே உதிக்கற்பாலதாம்.) இந்தியாவின் ஜனங்களுடைய நாணயத்தில் நம்பிக்கை குறையும்படி வியாபாரத்தில் தப்புத்தவறான மார்க்கங்களை யனுசரித்துப் பித்தலாட்டம் செய்பவன் தேச க்ஷேமத்துக்கு விரோதியாம் சுத்தப் போக்கிரியாவான். இந்தியர்கள் ஸ்வநம்பிக்கை யுள்ளவர்களாகி, (ஸ்வகாரியப் புலிகளா யிருப்பதுபோய்) ஸத்சங்கல்ப சாதனசித்தர்களாம் தீரர்களாயிருக்கவேண்டும். பிரவிருத்தி மார்க்கத்தில் பிறர் போன வழியைப் பற்றிச் செல்லாது தனிவழிகண்டு துணிவுறநடக்கும் தூயசுத்தரும் துணிந்த தீரருமாக விருக்கவேண்டும். இப்படியிருந்தால் மேற்றிசை நாகரிகத்தில் போ

ட்டிபோட்டு அழிவழிபற்றி ஆர்ப்பாட்டஞ்செய்து அக்கிரமங்கள் மலிந்து அதனால் ஜனக்ஷேமம் நலிந்துபோகும் கண்போருவிதியாம் "கண்ணுவி" க்கிடமின்றி உலகத்திலுள்ள ஜாதியாருக்கெல்லாம் உத்தம வழிகாட்டும் மேதாவிகளாக விருக்கும் பெருமையும் கீர்த்தியும் பெற்று பெருவாழ்வு வாழலாம்" என்று அவர் உண்மையைச் சொன்னார். *

நம்மவர்கள் ஆத்மபுத்தி யில்லாதவர்களாயிருப்பதால் படித்தும் பிரயோசன மின்றி ஸ்வயநலம் பாராட்டும் தன்மையும் ஸ்வகாரியப்புலித்துவமும் நிறைந்தவர்களாய், பரசேவையாம் "ஸ்வாமி காரியத்தில்" வழவழவென்று நழுவிவிழுவார்களாக விருக்கிறார்கள். "யதாராஜா ததாப்பிரஜா" என்னும் வாக்கியத்தைக்கொண்டு அரசனெவ்வழி குடிகளவ்வழியென்கிற தர்மத்தை யனுசரித்து நம்மவர்கள் ஸ்வதர்மத்தை யிழந்தவர்களானார்கள். ஆசானைப்போல் சிஷனும் என்று ஸ்வதர்மத்தை யிழந்து நெல்லிக்காய் மூட்டைகளான "கற்றுங்கயவராம்" ஆத்மபுத்தியில்லாப்போதகர் வழிப்பட்டுப் பிள்ளைகளும் அவருக்கு மிஞ்சியவர்களாய்ப் போகிறார்கள். இதற் குதாரணம் வேண்டு மாயின் உபாத்தியாயர்களின் குணவிசேஷத்தைப் பற்றி, உபாத்திமைத் தொழிலில் சிறந்தவரான ஒருவர்தாம் சொல்லும் வாக்கு நாம் சொல்வதற்கு அத்தாக்ஷியாம்.

*The actual words used by Professor Lees—Smith are:—"What you need is confidence, confidence in each other, confidence in yourselves. Confidence in each other because co-operation is the test of civilization and you must co-operate with mutual trust. The man who by shady transactions, by sharp practice in business diminishes the trust of the Indian nation, is not only a scoundrel, but is an enemy of the Indian people. You need confidence also in each other, you need to do things for yourselves, instead of always depending upon Britain and the Government. You need to strike out new paths and to pioneer new methods of progress. If you can do that, you will then I believe, be able to teach mankind a lesson, because you have it in your power, if you are careful of your own characters, by acquiring that in which Great Britain in strong. Her confidence and enterprise, to at the same time avoid the ferocity, the cruelty and the heartlessness of those who compete in the struggle which disfigures western civilization. If you can do that you will succeed in rising to be one of the *proudest* nations of the earth."

சென்னை யூனிவர்ஸிடியில் எம். ஏ; எல். டி., பி. எல்., என்கிற மூன்று சாகைகளில் மிகவுயர்ந்த வித்யாபட்டம்பெற்று உபாத்திமைத்தொழிலையே சிறந்ததென்று கைக்கொண்டு உள்ளபடி கள்ளமின்றி அத்தொழிலிலுழைத்துவரும் உண்மையாளரான ஸ்ரீ கே. பி. இராமநாதய்யரவர்கள் "உபாத்தியாயர்சங்கம்" என்னும்தலைப்பின்கீழ் எழுதியுள்ள வியாசமொன்றில், உபாத்தியாயர்கள் சங்கங்களுக்கு அதிக செல்வாக்கில்லாததற்குண்டான "சிலகாரணங்களை"ச் சொல்கிறார் கேளுங்கள்:—

"உபாத்தியாயர் தொழில் வகித்தவர்களில் சிலர் கவர்ன்மெண்டு உபாத்தியாயர்கள்; சிலர் பாதிரிமார்கள், அல்லது பாதிரிமார்கள் ஏற்படுத்திய ஸ்கூல்களில் இருப்பவர்கள்; மற்றவர்கள் இந்தியர்கள் ஏற்படுத்திவரும் ஸ்கூல்களில் இருப்பவர்கள். இம்மூவகையாருள் சிலர் உயர்ந்த சம்பளக்காரர்கள், சிலர் தாழ்ந்த சம்பளக்காரர்கள். இத்தனைபேரும் ஏகோபித்து உபாத்திமார் சங்கத்தைச் சேர்கிறது அசாத்தியம். இத்தனைபெயருக்கும் உபாத்தியாயமார்கள் பொதுவிஷயங்களில் சிரத்தை இருக்க எதிர்பார்க்கத் தக்கதும் அல்ல."

ஏனென்று ஸ்வபாவமாகப் பிறக்கக்கூடிய கேள்விக்கு மறுமொழியாக அவர் கூறுவது என்னவெனில்:—

"(1) உயர்தரப் படிப்பு சொல்லிக்கொடுப்பவரும், உயர்ந்த சம்பளம் வாங்குகிறவர்களும் சீமையிலிருந்து மேதைகளென்று கியாதியோடு வந்தவர்களும் இந்த அற்பமான இந்திய உபாத்தியாயர்கள் கூட்டத்தைச் சேர்வதால் தங்களுக்கு என்னபிரயோஜனம் உண்டாகப்போகிறதென்று ஒதுங்கி நிற்கலாம்.

"(2) கவர்ன்மெண்டுவகுப்பைச்சேர்ந்தவர்கள் தங்கள் சம்பளமாவது பென்ஷனாவது இச்சங்கங்களால் ஜாஸ்தியாகப் போகிறதா; சமயாசமயங்களில் தங்களில் உயர்ந்த உத்தியோகஸ்தரைப் பார்த்து அவர்களுக்குத் தக்க மரியாதையைப்பண்ணி தங்கள் ஸ்திதியை மேன்மைப்படுத்திக்கொள்ளலா மென்று ஒதுங்கி நிற்பார்கள்.

(3) பாதிரிமார் உபாத்தியாயர்களும் இப்படி எண்ணக்கூடும்."

ஆகவே இப்படி அவர் மூவகையாகப்பிரித்த உபாத்திமார்கள் அனைவரும், உண்டுடுத்துப் பசிதாகந்தீரப் போந்த பிழைப்புள்ளவராயினும், ஊருக்குழைக்கும் பரசேவையைத் தள்ளித் தம் காரியத்திலே கண்ணாக, மனக்கண் பஞ்சடைந்து கிடக்கிறார்கள். இப்படிப்பட்ட ஆசான்களிடத்துப் படித்துத் தேறுகிற பிள்ளைகள், இக்குணத்தில் இவர்களிலும் மிஞ்சினவர்களாகவே யிருப்பார்கள் என்பதற்குக் கேட்பானேன்? இப்படிப்பட்ட ஸ்வயநயப்புஞ்சங்களுக்குச் "செல்வாக்கு" என்னமாக உண்டாகும்? "ஆகவே, பொது விஷயங்களில் சிரத்தை உடையவர்கள் கொஞ்சமாயிருப்பார்கள்" என்று இவர் சொல்லும் வார்த்தை உபாத்திமார் சங்கத்துக்குழைக்கும் துறையில்மட்டுமன்றி எல்லாத்துறையிலும் அப்படியே என்பதை யுணர்ந்துகொள்ளவேண்டும். "இவர்களை நிராகரிக்கக்கூடாது" என்று உபாத்திமைச் சங்கத்தார் மட்டுமல்ல, ஜனசமூகத்திலுள்ள ஒவ்வொருவரும், தனியாகவாகட்டும், சங்கத்தாராகவாகட்டும், "முயற்சியால் காட்டினால்," ஊருக்குழைப்பதே உத்தமமான ஜீவனவழியென்று "மற்றவர்களும் நாளாவிர்த்தியில் வந்து சேர்வார்கள்." அப்படிக்கின்றித்தான்தோன்றித்தம்பிரானாய், ஊருக்குழைத்தாரை உதாசினமாகத்தள்ளி தனக்குமிஞ்சிய தம்பிரானில்லையென்று கேவலம் ஜீவனார்த்தம் உழைப்பாருளிருக்குங்குற்றத்தையே ஊருக்குழைக்கும் உத்தமவழியிலும் கொணர்ந்து ஸ்தாபித்தால், எல்லாரும் கெட்டு நல்லாரும் பொல்லாரும் நயமில் வஞ்சகர் செய்யும் அஞ்சிடாக் கூத்துக்காளாகவேண்டியது தான். "தந்தலையாட்டம் தலைக்குமேலே" யென்றாடினால், செத்தவன் சாகிறான், பிழைத்தவன் பிழைக்கிறான் என்பதுண்மை. ஆனால் செத்தவன் பிழைத்திருப்பதும், பிழைத்தவன் செத்துக்கிடப்பதும் சநாதந தர்மவிதியென்பதை "யுணர்ந்தும் உணர்கிலார் ஊனரே" யென்றபடி, அறிந்து மறியாதவர் பிழைக்கும்வழி யறியாப் பேதைகளேயாவர். ஆகையால் யாவரும் மனமொழி மெய்களால் தன்வாக்கைக் காப்பாற்றிச் செல்வாக்குப்பெறல்வேண்டும். இதுவே பிழைக்கும்வழி.

## "FREE FROM BONDS"

(THE AUTOBIOGRAPHY OF A TALUQ GUMASTAH)

### * அவிழ்த்துவிட்ட கழுதை.

ஒரு தாலூகா குமஸ்தாவின் சரித்திரம்.

நான் முதல்தடவை மெட்ரிகுலேஷன் பரீக்ஷைக்குப் போனபொழுது என் தகப்பனாருக்கு ஏதோ தேகத்தில் அசௌக்கிய முண்டாகிப் படுத்துக்கொண்டிருந்தார். கடைசிநாள் பரீக்ஷை எழுதிக்கொண் டிருக்கையிலேயே அவருக்கு ஆபத்தாயிருக்கிறதென்று என்னை அழைக்க ஆள்வந்துவிட்டான். நானும் அவசரமாய்ப் பரீக்ஷை எழுதிக்கொடுத்துவிட்டு சாப்பிடாமலே இரவில் தனித் தபால்வண்டி வைத்துக்கொண்டு ஊருக்குப் புறப்பட்டேன். பாதிவழியில் சூரியோதயமாயிற்று. பால சூரியனுடைய பெருமையைக் கவனிக்க அவகாசமில்லை. என்தகப்பனாரைக்கண்டு அவருடைய கடைசி மனோரதத்தை நிறைவேற்றவேண்டியது என் கடமை யென்று அவரை உயிருடன் கண்டுபேச ஆவல்கொண் டிருந்தேன். குதிரை ஓட்ட அபேக்ஷை யில்லை. கிராமக் கிணறுகளில் பெண்கள் தண்ணீர் எடுத்துக்கொண்டுகுடமும்கையுமாய்ப் போய்க்கொண் டிருந்தார்கள். அவர்களைப் பட்டாணிக்கடலைகளினால் சுடலாமென்கிற எண்ணமுண்டாகவில்லை. அஸ்தமனமாகிறவேளைக்குஊர்போய்ச் சேர்ந்தேன். வண்டியை விட்டிறங்கி வீட்டுக்குள் நுழைந்ததும் "அப்பா" என்றுபடுக்கையண்டை போனேன். நான் வரும்வழியை எதிர்பார்த்துக்கொண்டிருந்த என் தகப்பனார் என்னைக்கண்டதும் "வா" என்று என்னைக்கட்டியணைத்து முத்தமிட்டுச் "சாப்பிட்டாயோ" என்றார். "ஆய்விட்டது. நான் தங்களுக்கு என் செய்யப்பட்டும்" என்றேன். "எனக்குச் சந்நியாஸம் வாங்கிக்கொள்ள வேண்டும்" என்றார். "அப்படியே செய்கிறது" என்றேன். என் தாயார் வந்தாள். அவளிடத்தில் இந்தச் சமாசாரத்தைச் சொன்னேன். "அவரிஷ்டப்படி செய்யத் தடையென்ன?" என்றாள். ஆஸ்பத்திரி வைத்தியர் வந்

* தன்னையறிந்து தன்வழியில் பிரவேசிக்கும் மனோதர்மசக்தி தடையறியாது.

தார். அவரை "அப்பா பிழைப்பாரா" என்றேன். "அவ்வளவு நிச்சயமாய்ச் சொல்லமுடியாது. வியாதிமட்டும் சாதாரண வியாதியல்ல. பெரிய மனுஷியாளுக்கு வருகிற வியாதி. "மலேரியா" என்று பெயர். மருந்துமட்டும் சரியான மருந்து கொடுத்திருக்கிறேன்." என்றார். மறுநாள் தகப்பனாரை ஆற்றங்கரையில் இருந்த யதிகள் மடத்துக்குக் கொண்டுபோய் அங்குவந்திருந்த ஒரு யதிகளிடமிருந்து உபதேசம் செய்வித்துக் கிரமப்படி ஸந்நியாசாசிரமம் கொடுக்கப்பட்டது. அதற்குப்பிறகு அவர் வீட்டுப்பேச்சை எடுக்கவேயில்லை. என் தாயாரும் அவர் உயிரிருக்கும் வரை அவரெதிரில் வரவில்லை. அதற்கு மறுநாள் சாயந்திரம் அவர் தேக வியோகமானார். எனக்குமட்டும் அவர் அவ்வாற்றங்கரையிலிருந்த கோவிலுக்குச் சுவாமிதரிசனத்துக்குப் போயிருப்பதாகத்தோற்றியதே ஒழிய இறந்துபோய்விட்டதாகத் தோற்றவில்லை. அவர் தேகத்தை ஆற்றங்கரையிலேயே கோவிலுக்குப் பின்புறத்தில் அடக்கம் செய்தோம். அதற்குப்பிறகு வீட்டுக்குப்போனதும் என் தாயார் என்னைக் கட்டிக்கொண்டு ஒருதரம் அழுதாள். அதற்குமுன் அவள் அழவேயில்லை. என் தம்பி விளையாட்டுக்குழந்தை. நாங்கள் அழுதால் அவனும் அழுவான். நாங்கள் நிறுத்திவிட்டால் அவனும் நின்றுவிடுவான். பத்துநாள் கழித்து ஜாதி ஆசாரப்படி என் தாயார் தன் தலைமுடியைவாங்கினாள். அப்பொழுதுதான் அவளுடைய மனோதைரியம் எனக்கு நன்கு விளங்கிற்று. அவளுக்கு அப்பொழுது வயது 35. "அம்மா இந்தக் கோலங்கொள்ள எப்படிஉனக்கு மனம்துணிந்தது" என்றேன். "நீ மாதம் இரண்டுமுறை க்ஷவரம் செய்துகொள்ளவில்லையா? இன்றுமுதல் நான் ஸ்திரீஜன்மத்தைத் தொலைத்துப் புருஷஜன்மமெடுத்துவிட்டேன்" என்றாள்.

சிலநாள் கழித்து எனக்கு மெட்றிகுலேஷன் பரீக்ஷை தவறிற்று என்று சமாசாரம் தெரிந்தது. மேலே என்ன செய்கிறதென்று என் தாயாரைக்கேட்டேன். "எனக்கு என்ன தெரியுமப்பா, நான் பெண்பிள்ளை. உனக்கு எது சரியென்று தோற்றுகிறதோ அதைச் செய். ஆனால் நீ மறுபடியும் படிக்க ஆரம்பித்தால் உன் தகப்பனார் அனுப்பியதுபோல் என்னால் உன் செலவுக்குப்பணம் அனுப்ப முடியாது" என்றாள். உடனே என் மாமனாருக்குக் கடிதம் எழுதினேன். அவர் "உனக்குப்படிக்க அபிப்பிராயமாயிருந்தால் நான் தடுக்கவில்லை. மாதம் ஏதாவது 8 அல்லது 10 ரூபாய்வரை உன்செலவுக்குக் கொடுத்தனுப்புகிறேனென்று எழுதினார். நான் ஊரிலிருந்தநிலத்தைக் குத்தகைக்கு விட்டுவிட்டு என் தாயாரையும் தம்பியையுமழைத்துக்கொண்டு திருச்சினாப்பள்ளியிலேயே குடியிருந்துகொண்டு இன்னொரு வருஷம் படிக்கிறதென்று தீர்மானித்தேன். இவ்வருஷம்தான் நான் ஏழ்மையின் கொடுமையை நன்றாயறிந்தேன். இவ்வளவுநாள் விளையாட்டுப் பிள்ளையாய்க் காலம்கழித்துவந்த எனக்கு இப்பொழுதுதான் குடும்பபாரம் உரைத்தது. நானும் என் தம்பியும் பாதிரிகளுடைய தயவினால் சம்பளமில்லாமல் படித்தபோதிலும், சம்பாதிக்காமல் செலவுமட்டும் செய்துகொண்டு சாப்பிடவேண்டியிருந்தமையால், அநேக சௌகரியங்களை இழக்கவேண்டியிருந்தது. எனக்கும் மனதில் சந்தோஷமில்லை. என் தாய்க்கும் சந்தோஷமில்லை எங்களிருவருக்கும் இது நன்றாய்த்தெரியும். ஆனாலும் அடிக்கடி ஒருவரைஒருவர்தேற்றிச் சமாதானம் செய்துகொள்ள முயல்வோம். அப்படிச்செய்வது வீணென்றும் தெரியும். தனக்குள் சமாதானமில்லாமல் பிறருக்கு எப்படி சமாதானமுண்டாக்குகிறது? இருந்தாலும் வேறுவழியில்லை. என்னுடைய பழைய சிநேகிதர்களெல்லாம் போய் விட்டார்கள். மணியன், ராமுடு இருவருக்கும் பரீக்ஷை தவறிப்போயிற்று. மணியன் இன்னொருதரம் படிக்க இஷ்டமில்லாமல் நின்றுவிட்டான். ராமுடு இன்னொருதரம் படிக்க சக்தியில்லாமல் நின்றுவிட்டான். எனக்குக் கீழ்படித்த பிள்ளைகளெல்லாம் என்னுடன் படிக்கிறதையும்

என்னுடன் படித்தவர்களெல்லாம் எனக்கு மேலே படிக்கிறதையும் பார்க்க எனக்கு வெட்கமாயிருந்தது. தினம் சாயந்திரம் ஆற்றங் கரைக்குப் போய்த் தனிமையில் அழுவேன். மணியனுக்கும் கலியாணிக்கும் கடிதம் எழுதுவேன். அவர்கள் எழுதும் பதில்கடிதங்கள் தான் எனக்குக் கொஞ்சம் ஆறுதல் கொடுத்தன. கலியாணி "நீங்கள் எனக்குக் கடிதம் எழுதவேண்டாம். சித்திரங்கள் எழுதியனுப்புங்கள்" என்றாள். அவள் என்னை முதல் முதல் வேண்டிக்கொண்டபடி ஒருதாய் இறக்கும்தருணத்தில் தன்மகளை ஆசீர்வதிக்கும் சித்திரம் ஒன்று எழுதுகோலால் வரைந்தேன். அப்பொழுதிருந்த என்மனோநிலைமையில் அது எனக்கு சகஜமாயும் சுலபமாயும் எழுதவந்தது. மேலும் என்தகப்பனார் இறந்த சந்தர்ப்பம் என்மனதில் நன்றாய்ப் பதிந்திருந்தமையால் அச்சித்திரத்துக்குவேண்டியஉபகரணங்கள் என்மனதிலே இருந்தன. நான் அப்பொழுது எழுதிய சித்திரத்தைக் கலியாணி இன்னும்கண்ணாடிபோட்டுவைத்திருக்கிறாள். நான் இப்போது அதைப் பார்க்கும்பொழுது அதிலிருக்கும் உருவங்களில் அநேக திருத்தங்கள் செய்யலாமென்று தோன்றினாலும், அச்சித்திரத்தினால் நான் தெரிவிக்கவந்தஉட்கருத்தை அதைக்காட்டிலும் நன்றாய் இப்பொழுது தெரிவிக்கமாட்டுவேனோ என்று சந்தேகிக்கிறேன். கலியாணி பின்வருமாறு எனக்குப் பதிலெழுதினாள்: "அநேக நமஸ்காரம். நீங்கள் அனுப்பின சித்திரம் வந்தது. அதைப்பார்க்கப் பார்க்க எனக்கு வெகுசந்தோஷமாயிருக்கிறது. அதை ஜாக்கிரதையாய்க்காப்பாற்றி வைத்துக்கொள்ளுகிறேன். அதிலுள்ள பெண்குழந்தை ஒற்றைக்கண்ணைக்கசக்கிக்கொண்டு மற்றொரு கடைக்கண்ணால் தன்தாய் முகத்தைப்பார்க்கிறது வெகு அழகாயிருக்கிறது. இறக்கிறதாயார் மட்டும் இன்னும் கொஞ்சம் இளைத்திருக்கலாம். இதைப் பார்க்கிற எனக்கே இவ்வளவுசந்தோஷமுண்டாகும்பொழுது இதை எழுதின உங்களுக்கு எவ்வளவு சந்தோஷ மிருக்கவேண்டும். எனக்கு இவ்வளவு எழுத வந்துவிட்டால் தலைகீழாய் நடப்பேன். அடிக்கடி இன்னும் ஏதாவது எழுதுங்கள்." என்மனதில் சந்தோஷமாம்! சந்தோஷமாயிருந்த நாளிலெல்லாம் இது எழுதவரவில்லையே! துக்கப்படும் பொழுதல்லவோ எழுதவந்தது. என்னவோ அவளுக்குத் தோன்றியதை அவள் எழுதினாள் குழந்தை! நாள் கலியாணிக்குப் பதிலுக்கு எழுதின கடிதத்தைப் பின்னால் வரைகிறேன்.

(இன்னும் வரும்)



## SITA—A TALE OF HINDU DOMESTIC LIFE.

## சீதா, அல்லது இல்லற வாழ்க்கை.

### 24-வது அதிகாரம்.

செல்லத்தின் புருஷன் பெயர் சாமிய்யர். இவர் செல்லத்தின் கல்லியாணத்திற்கென்று அப்படி பெயர்வைத்துக் கொண்டாரே அல்லாமல் யதார்த்தத்தில் அவருக்குப் பெயர் சாமிய்யங்கார். கல்லியாணமானதும் இவர் பெண்ஜாதியை ஊருக்குக்கூட்டிப் போகவேண்டுமென்றார். சொர்ணம் அவள் ருதுவாகிறதுக்குள் அனுப்பமாட்டேனென்று சொன்னாள். அவர் அதற்கு சம்மதியாததால் நாகம்மாள் செல்லம் இருவரையும்தெருளவைக்கிறதென்கிற வழக்கத்தை அனுசரித்து தெருண்டது போல் தனியாக வைத்து அதற்கு வேண்டிய செலவுகளெல்லாம் காமேசுவரய்யரிடம் வாங்கினாள். பிறகு சாந்தி முகூர்த்தம் என்ற பெயரை வைத்து அதையும்செய்துபெண்ணை சாமிய்யருடன் அனுப்பினாள். தாத்தா ஜானகிராமய்யர் இதைப்பார்த்து நாகம்மாளையும் அனுப்பும்படி கேட்டார். சொர்ணத்துக்கு அது விஷயமாய் என்ன ஆக்ஷேபனை இருக்கப் போகிறது! வெகு சந்தோஷமாய் சம்மதித்தாள். நாகம்மாளுக்கு சொர்ணத்தினிடம் இருப்பதைவிட ஒருகாட்டில் இருப்பதுகூட நலமென்று தோன்றிற்று. அவளும் வெகு சந்தோஷத்துடன் ஜானகிராமய்யரோடு புறப்பட்டுப் போய்விட்டாள். செல்லத்தைபுக்காத்துக்கு அதற்குள் அனுப்ப சொர்ணத்துக்கு கொஞ்சம்கூடப் பிரியமில்லை சாமிய்யர் ஒரே வீம்பாய்கூட்டிப்போகவேண்டும் என்றதால் அவளை அனுப்பும்படி நேரிட்டது. செல்லத்தை அனுப்பிவிட்டு சொர்ணம்மாள் இரண்டு நாள் அதேவிசாரமாக விருந்தாள்.

பிறகு காமேசுவரய்யர் அவளைத்தேற்றினார். செல்லம் புக்ககம் போகிறதைப்பற்றி வெகு

சந்தோஷப்பட்டுக்கொண்டு நல்லஇடம் அகப்பட்டது நமக்கு என்னகுறைவு என்றுமனக்கோட்டை கட்டிக்கொண்டேபோனாள். வீடுபோய் இறங்கினதுதான் தாமதம். இவள்புக்காத்து யோக்கியதையெல்லாம்புறப்பட்டது. செல்லத்தின் புருஷன் ஜாதியில் வைஷ்ணவன். அவன் செல்லத்தை ஏமாற்றி கல்லியாணம்செய்துகொள்வதற்காக சாமிய்யர்என்று பெயர் வைத்துக்கொண்டானே அல்லாமல் அவன்பேர் சாமிஅய்யங்கார். சாமிஅய்யங்காருக்கு எப்போதும் பெண்டாட்டியின் அவசியம் இல்லை. அவர் லீலாமணியென்று ஒரு குறத்தியை வைத்திருந்தார். அவள் ஜாதியில் குறத்தியாயிருந்தபோதிலும் வெகு அழகாயிருப்பாள். சாமிய்யங்கார், பெண்டாட்டியை சமயல் முதலியவீட்டுக்காரியம்பார்ப்பதற்கு கல்லியாணம் செய்து கொள்ளுகிறதேயொழிய அவளுடன் போகத்திற்கு கல்லியாணம் செய்துகொள்வதில்லை. செல்லத்துக்குமுன் ஒருபெண் கல்லியாணம் ஆகி அப்பெண்ணை சாமிய்யங்கார் ஒரு பிள்ளை இருக்கும்போதே லீலாமணியின் வார்த்தையைக் கேட்டுக்கொண்டு வெகு கொடுமையாய் நடத்திவந்தான். ஒரு தடவை அந்தப்பெண்ணை லீலாமணியும் சாமிய்யங்காரும் சேர்ந்து கம்பத்தில்வைத்து கட்டி வாயில் துணியை அடைத்து சூடுபோட்டுவிட்டார்கள். ஆ! ஆ! என்னகொடுமை! என்னகொடுமை! தாய் தகப்பனைவிட்டு புருஷனையே சரணம் என்று அடைந்த ஒருபெண்ணை இப்படி சூடுபோடுகிற மனிதனை சித்திரவதை செய்தால்தான் என்ன? அப்பெண் அது பொறுக்கமாட்டாமல் அதையே மனதில் வைத்திருந்து கொஞ்சநாளைக்குப் பிறகு ஓர் கிணற்றில் விழுந்து இறந்தாள். பிறகுசாமிய்யங்கார் அதை ஒளித்து போலீஸ்தார் ஊரார் எல்லாரையும் லெஞ்சம் கொடுத்து அடக்கிவிட்டார். தனக்கு பெண் ஒருவரும் கொடுக்கமாட்டார்களென்று கண்ட சாமிய்யங்கார் பணத்தைப்பாராமல் சொர்ணத்துக்குக் கொடுத்து செல்லத்தை ஏமாற்றிக் கல்லியாணம் செய்து வந்து விட்டார். செல்லத்துக்கு இதை யெல்லாம் கேழ்க்கக் கேழ்க்க வெகுவருத்தம். கொஞ்சநாளைக்குப் பிறகு தன் தாயிடம் இதையெல்லாம் பூவரச்நல்லூருக்குப்போன ஒருவர் மூலமாய் சொல்லி அனுப்பினாள். சொர்ணத்துக்கு இதையெல்லாம் கேழ்க்க இடிவிழுந்ததுபோல்இருந்தது. இந்த சமயத்துக்கு என்று நாகம்மாளிடமிருந்து தன் புருஷன் தனக்கு மூவாயிரம் ரூபாய்க்கு நகை செய்ததாகவும், தன்னை வெகுபிரியமாக வைத்திருப்பதாகவும் கடிதம் வந்தது. இதுவும் தெய்வச் செயலல்லவோ! சொர்ணத்துக்கு தன் பெண்கஷ்டப்படவும் நாகம்மாள் சுகப்படவும் இதுகளைகேழ்க்க நாக்கைப்பிடிங்கிக்கொண்டு பிராணனை விட்டுவிடலாம் போலிருந்தது. கடைசியில் நேரில்போய் பெண்ணைப்பார்த்துவரலாமென்று புறப்பட்டும் போனாள். சாமிய்யங்கார்சொர்ணம்மாளைக்கண்டதும் இனி நமக்குபயமில்லை யென்று நினைத்து தன் வரலாறுகளை யெல்லாம் சொன்னார். சொர்ணம்மாள் அவனுடன் சண்டை போட்டாள். அவர் கடைசியாக சொர்ணம்மாளைப் பார்த்து நீசண்டை பிடிப்பதில் பிரயோசனமில்லை. உன் பெண் நல்லமாதிரியாய் இருந்தால் நான் அவளை நன்றாய் வைத்திருப்பேன். இல்லாவிட்டால் முன் பெண்ஜாதியின் கதிதான் கிடைக்கும் என்றான். சொர்ணம்மாள் பிறகு தன் பெண்ணுக்கு அவர் மனசு கோணாமல் நடக்கும்படிக்கும் லீலாமணியைப்பற்றி ஒன்றும்பேசாமல்இருக்கும்படிக்கும் சொல்லிவிட்டுப் போய்விட்டாள். செல்லத்துக்கு இப்பொழுது தகுந்த பாலியமாதலால் வெகு அழகாயிருந்தாள். எப்படி இருந்தும் சாமிய்யங்கார்இவளைலட்சியம்செய்கிறதில்லை. எப்போதாவது அதிசயமாக செல்லத்தினிடம் வந்துசுகித்திருப்பார். மற்றவேளைகளெல்லாம் லீலாமணியோடுதான்இருப்பார். இப்படி இருக்க அந்த ஊருக்கு சுந்தரராவ் என்று ஒருவர்வந்தார். அவர்கதைசொல்வதில்வெகு கெட்டிக்காரர். அவர்ஒரு தடவை லீலாமணி வீட்டுக்கு வந்து கதை சொன்னார். அதைக் கேட்டு லீலாமணி வெகுசந்தோஷப்பட்டு அவரை அடிக்கடி தன் வீட்டுக்கு வரச்சொன்னதும் தவிர அவரை தன் வீட்டிலேயே குடியாய் வைத்துக்கொள்ளும்படி சாமிய்யங்காருக்கு சிபார்சு செய்தாள். சாமிய்யங்கார் அப்படியே வைத்துக்கொண்டார். சுந்தரராவ் நல்ல அழகுள்ளவர். ஆனால்இவர் அந்த ஊரில் எங்கேயும் வெளியே போகமாட்டார்.

லீலாமணி வீட்டுக்குக்கூட ஒருநாள் ஒரு தடவை தான் போவார். மற்ற வேளைகளெல்லாம் சாமிய்யங்காருடையவீட்டிலேயேதான்

இருப்பார். சாமிய்யங்கார் எப்போதும் லீலாமணிவீட்டிலேயேதான்இருப்பார். சாமிய்யங்கார் வீட்டில் இருக்கும்போதெல்லாம் சுந்தரராவுடன் கதை கேட்பது தான் அவருக்கு வேலை. இவர் கதைகளைக்கேட்டுக்கேட்டுசெல்லத்துக்கும் சுந்தரராவ் மீது ஒரு பிரியம் ஏற்பட்டது. சுந்தரராவ் தனியாக இருக்கும் காலத்தில் செல்லம் அவர் அறைப்பக்கத்தில் அடிக்கடிபோய் ஜன்னல் வழியாக எட்டிப்பார்ப்பாள். சுந்தரராவு அதைக்கண்டு ஜன்னலுக்கு நேரே வருவார், பிறகுஅவள் சங்கோஜப்பட்டுக்கொண்டுபோய்விடுவாள். இப்படி கொஞ்சநாள்நடந்துவந்தது. பிறகுசாமியய்யங்காரோடு சுந்தரராவ் இருக்கும்போது செல்லம் சாமியய்யங்கார் வேறுகவனமாயிருக்கும்போது சுந்தரராவ் முகத்தையே பார்ப்பாள். சுந்தரராவு அவளை நிமிர்ந்து பார்த்தால் தலையைக்குனிந்துகொள்வாள். சில சமயங்களில் சுந்தரராவு தனியாக தன் அறையில் பாடஆரம்பித்தால் செல்லம் தன் அறையில்பாட ஆரம்பிப்பாள். இப்படி கொஞ்சநாளிருக்க சுந்தரராவுக்கு செல்லத்தின்மீதுஆசைபொறுக்கக்கூடவில்லை. இதற்குஎன்னசெய்யலாமென்று யோசித்து ஓர் கடிதத்தை எடுத்து அடியில் வருமாறு எழுதினார். "செல்லம், என்மனத்தின் எண்ணம் எனக்கு தெரியவில்லை. மன்மதன் என்னை எரிக்கிற எரிப்பு எனக்குபொறுக்கமுடியவில்லை. நீ எவ்விதமாக பொறுக்கிறாயோதெரியவில்லை. உன் பால்யம் எல்லாம் வீணாகப்போகிறது. சுவாமி இந்த பாவியத்தை அனுபவிப்பதற்குக் கொடுத்திருக்கிறாரே அல்லாமல் வீண்போக்கும்படி கொடுக்கவில்லை உன் ஜாடைகளெல்லாம்நிஜமானால்இந்தக்கடிதத்திற்குப்பதில்என் ஜன்னல்வழியாகஎனக்கு உடனே கிடைக்கவேண்டும். இப்படிக்கு உன் இஷ்டன்" என்று எழுதி அதை அவள் உள்ளில்போட்டுவிட்டார். சுந்தரராவுக்கு பின்னால் அதே நினைவாக இருந்ததேயொழியவேறு ஒன்றிலும் புத்தியோடவில்லை. என்ன பதில் எழுதுகிறாளோ என்று வெகு ஆவலுடன் எதிர்பார்த்திருந்தார். கடிதம் ஒன்றையும் காணோம். பிறகு இந்த விசாரத்தை ஒருவாறு மறக்கும் பொருட்டு லீலாமணி வீட்டுக்குப் போனார். அங்கே வெகுநேரம் பேசி இருந்துவிட்டு பிறகு திரும்பிவந்தார். திரும்பிவரும்போதும் செல்லத்தின்பேரிலேயே நினைவாய் வந்தார். வீட்டில்வந்து அறையைத்திறந்ததும் ஓர் கடிதம் கிடந்தது. சுந்தரராவுக்கு அந்த கடிதத்தைப் படித்துப் பார்ப்பதற்குள்என்ன எழுதியிருக்கப்போகிறாளோஎன்றுதேகமெல்லாம் உதறிற்று. பிறகுகடிதத்தை உடைத்துப் பார்த்தார். அதில் அடியில்வருமாறு எழுதியிருந்தது: "என்கண்ணிற்குக் கண்ணான! சுந்தரத்திற்கு நமஸ்காரம். க்ஷேமம். தங்களை மன்மதன் எரிக்கிறதாகச் சொல்லுகிறீர்கள். உங்கள் கதி என்னைவிடவெகு நன்றாய் இருக்கிறதே. உங்களைமன்மதன் எரித்துக்கொண்டு மட்டும் இருக்கிறான். என்னை எரித்துச்சாம்பலாகவே செய்துவிட்டானே, நான் என்னசெய்யட்டும். தங்களைக்காணாமல் ஒரு நிமிஷம் ஒரு யுகமாயிருக்கிறதே. தங்கள் மனது தெரியவில்லையே என்றுதங்களைவிட பத்துமடங்கு கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கிறேன். இப்படிக்கு தங்கள் செல்லம்" இந்தக்கடிதத்தைப்பார்தவுடன் சுந்தரராவுக்கு வந்தசந்தோஷத்திற்கு அளவு இல்லை. அந்தக்கடிதத்தை கண்ணில்ஒத்திக்கொண்டார். அடிக்கடிமுத்தமிடடுக்கொண்டார். பிறகு மெள்ள உள்ளில்போய் செல்லம் என்று கூப்பிட்டார். செல்லம் மெல்ல வந்து ஒரு ஓரத்தில் நின்று சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு ஏனென்றுகேட்டாள். சுந்தரராவு தாகமாயிருக்கிறதென்றார். செல்லம் தாகத்தைத் தணிக்க என்னவேண்டுமென்றாள். சுந்தரராவுமெள்ளசெல்லம்தான்வேணுமென்றார். பிறகு ஒருவருக்கொருவர் அதிகநேசமாய்விட்டது. சாமியய்யங்கார் வீட்டில் இருக்கும் நேரம் தவிர செல்லும் மற்ற வேளைகளெல்லாம் சுந்தரராவினுடைய அறையில்தான் இருப்பாள். ராத்திரிவேளையில் சாமியய்யங்கார் வீட்டிலிருப்பதே கிடையாது. செல்லமும்சுந்தரராவுடைய படுக்கையைவிட்டு வேறேயெங்கேயும் இருக்கமாட்டாள். இப்படி இருவருக்கும் வெகு சிநேகமாயிருந்தது. ஆனால் சந்தேகம் வந்துவிட்டால்என்னசெய்கிறதென்று செல்லம் எப்போதாவது தன் புருஷனையும் ஸ்தோத்திரம்செய்து தன்னுடன் சுகித்திருக்

கும்படி செய்துவந்தாள். இப்படிசெல்லமும் சுந்தராராவும் கொஞ்சிக் குலாவிக்கொண்டிருக்கும் நாளில் ஒருநாள் வாசலில் ஒருவன் சித்திரம் வியாபாரம் செய்துகொண்டு வந்தான். செல்லம் அவனைக்கூப்பிட்டு சித்திரங்களையெல்லாம் காட்டச்சொன்னாள். அதில் ஓர் அழகிய சித்திரத்தை எடுத்து இது யாருடையது என்று கேட்டாள். சித்திரக்காரன் இது கொலைகேசில் தண்டனை அடைந்து தூக்கில் போடப்பட்ட கிருஷ்ணசாமிய்யனுடையது என்றான். செல்லத்துக்கு அதைப் பார்க்கத்திடுக்கிட்டது. உடம்பெல்லாம் நடுங்கிற்று. என்னஆச்சரியம்! அந்த சித்திரம்சுந்தராராவைப் போலவே இருந்தது. திரும்பி சுந்தராராவைப் பார்த்தாள். சுந்தரராவுடைய உடம்பும்நடுக்கம் கொடுத்தது. உடனேசெல்லம் அந்த சித்திரக்காரனைப் போகச்சொல்லி விட்டு வீட்டிற்குள் வந்தாள். செல்லத்துக்கு அது முதல் ஓர்கொலையாளியிடம் நாம்சுகித்திருக்கிறதா என்றும் சர்க்காரில் தெரிந்தால் எல்லோருக்கும் தண்டனை கிடைக்குமமே என்றும் பயமுண்டாகி விட்டது. சாமிய்யங்கார் வந்ததும்செல்லம் அவருடன்இந்த சங்கதிகளைச்சொன்னாள். சாமிய்யங்காரும் சுந்தராராவைத்தனியாய் அழைத்து என்னவென்று கேட்டார். சுந்தரராவுக்கு மறைக்க முடியவில்லை. சாமிய்யங்காரிடம் தான் தூக்கில்போடப்பட்ட கிருஷ்ணசாமிய்யன்தான் என்றும் தனக்கு உயிர் இல்லையென்று எல்லோரும் நெருப்பு வைத்துவிட்டதாகவும் ஒரு ரொஸேயோ பிரேதபரீக்ஷைக்குக்கொண்டுபோய் மருந்துகொடுக்கப் பிழைத்துக்கொண்டதாகவும், ரொஸேரியோ பயந்து தன்னைவெளியே கொண்டுபோய்போட்டுவிட்டதாகவும்,பிறகு தான் எழுந்திருந்து வெகுபசியாய் இருந்ததால் ஒரு ஹொட்டலுக்குப்போய்சாப்பிட்டுவிட்டுபிறகு அநேக விடங்களில் அலைந்துதிரிந்து இங்கே வந்து சேர்ந்ததாகவும் ஒப்புக்கொண்டார்.சாமிய்யங்கார் அவனை மறுபடி சர்க்காருக்குக் காட்டிக்கொடுக்க இஷ்டம் இல்லாமலும் அவனைத்தான் வைத்துகொள்ளவும் பயந்து அவனைக்கண்டித்து எங்கேயும் சொல்லாமல்அந்த ஊரைவிட்டு ஓடிப்போய்விடு என்று உத்தரவு கொடுத்தார். செல்லத்துக்கு வெகு வருத்தம் வந்துவிட்டது. தூக்கில் போடப்பட்டஒருவனிடம் நாம் சிநேகம் செய்தோமே என்று வருத்தம் ஒருபக்கத்திலும் பழகிய சிநேகத்தால் அவன் பிரிந்து போகிறானென்கிற வருத்தம்ஒருபக்கமுமாக இருந்தது.கிஷ்ணசாமிய்யன் பிறகு தன்தலைவிதியை நொந்துகொண்டு புறப்பட்டுப்போய் விட்டான். இவனுக்குத்தான் தண்டனை அடைந்ததைநினைக்க கிஷ்ணசாஸ்திரிகள்மீது கோபம் அதிகமாக உண்டானது. துஷ்டர்கள் சுபாவத்தைத்தான் பாருங்கள். தனக்குக்கெடுதல் செய்தநாராயணசாஸ்திரிகளை திட்டுவதை விட்டுவிட்டு, அவர் தூண்டினதினால் சகல கஷ்டங்களையும் கிஷ்ணசாமியன் அடைந்திருக்க கிஷ்ணசாஸ்திரிகள் மீது கோபப்படுவதும் காலக்கொடுமையல்லவா?

இரண்டு போக்கிரிகள் தெருவில் ஒருநாள் சண்டை போட்டுக்கொண்டார்கள். ஒருவனை ஒருவன் வாயில்வந்தபடி யெல்லாம் வைதுகொண்டிருந்தான். பிறகு தங்களை மட்டும் வைவதைவிட்டு அவரவர்கள் வீட்டுப்பெரியோர்களையும் வைய ஆரம்பித்தார்கள். பிறகு அவரவர் வீட்டுப்பெண்கள் விபசாரியென்று திட்ட ஆரம்பித்தார்கள். முதலில் வார்த்தையிலிருந்து பிறகு அடிக்க வந்துவிட்டார்கள். இதை யெல்லாம் பார்த்த ஓர் வித்துவான் இந்த சண்டையை விலக்கவேண்டுமென்று அவர் பக்கத்தில் போய் அடே ஏன் வீணில் சண்டை போடுகிறீர்கள். நாம் மனித ஜன்மம் எடுத்ததேபாபத்தைச்செய்ததினால்தான். அதிலும்ஆயுள்100 வருஷத்துக்கு மேலில்லை. அதிலும் பாதி தூக்கத்தில்போய்விடுகிறது. மற்றப்பாதியில்பாதி பாலியத்திலும் விருத்தாப்பியத்திலும் போய்விடுகிறது. மிச்சம் இருக்கிறபாதி யௌவனத்திலும்காமத்திலும்போய் விடுகிறது. மிச்சம கொஞ்சம் இருக்கிறது; இதில்தர்மத்தைச்செய்து பிறருக்குநன்றுசெய்தால் எல்லாரும் நம்மைக் கொண்டாடுவார்கள். நமக்கு பகவான் கிருபைசெய்வார். இதை விட்டு என் வீண் சண்டை போடுகிறீர்? என்றார். இதைக்கேட்ட அந்த போக்கிரி எதிர் போக்கிரியைப்பார்த்து "அடே மடயா அவர் புத்திசொல்வதைக் கேளடா! வீண்சண்டைபோடுகிறாயா, அவர்சொல்வதைப்பார்! அவர் ஜோட்டை தூக்கினால்கூட உனக்கு அந்த புத்திவருமோ" என்றான். எதிர்போக்கிரி "அவர்தான் என் ஜோட்டைத் தூக்கட்டுமே" என்றான். வித்துவான் துஷ்டர்களுக்கு நல்லவார்த்தைசொன்னதற்குப்பிரயோஜனம்

நமக்குக் கிடைத்ததென்று போய்விட்டார். அவன் துஷ்டனாதலால் தன்னைவைத துஷ்டனைத் திருப்பி வைவதைவிட்டு தனக்கு புத்தி சொன்ன வித்துவானை வைய ஆரம்பித்தான். அதுபோல கிருஷ்ணசாமிய்யனுக்கு கிஷ்ணசாஸ்திரிகளை நினைக்க நினைக்க ஆத்திரம்அதிகமாக அவருக்குமறுபடியும் ஏதாவது தீங்கு செய்யவேணுமென்று யோசித்தான்.

ஆனால் கிஷ்ணசாஸ்திரிகள், கிருஷ்ணசாமியய்யின் நாராயணசாஸ்திரிகளால் அவ்வளவு கஷ்டத்தை அடைந்து இருந்தும் அவர்பொறுமையாகி எல்லாவற்றையும் சகித்து கேவலில் சாக்ஷிகூட அவர்களுக்கு விரோதமாக சொல்லவில்லை. வேறொருவராய் இருந்தால் வேணுமென்றே அவர்களைக்கொல்ல எண்ணி நேரில் பாராத சங்கதிகளைப்பார்த்ததாக சொல்லி தண்டிக்கப்பிரயத்தினம்செய்வார்கள். கிஷ்ணசாஸ்திரிகள் அப்படி ஒன்றும் செய்யாமலிருக்க கிருஷ்ணசாஸ்திரி அவருக்கே மறுபடி தீங்கு செய்யத் தீர்மானித்தான்.

கமலாவடியில் கிருஷ்ணசாஸ்திரிகளுக்குதன்பெண்இறந்த பிறகு குடியிருக்கமனமே இல்லை. வெகு தூரதேசங்களுக்கெல்லாம் அதை மறக்கும்பொருட்டு பயணம் போனார். வெகு நாள் இப்படி அலைந்து விட்டு கடைசியில் ஒருமாஸம் தன் ஊரில் இருக்கலாமென்று வந்து சேர்ந்தார். அனந்தலட்சுமி அம்மாளுக்கு அந்த வீட்டில் இருக்கக்கூட பிடிக்கவில்லை: பயமாயிருந்தது. அனந்தலட்சுமி அம்மாள் ஒருநாள் ராத்திரி எழுந்திருந்து ஒரு விளக்கு ஏற்றிக் கொண்டு கூடத்தில் போனாள். அப்போதுகூடத்தில் உருவம் நின்றது. யார் என்று உற்றுபார்க்க கிஷ்ணசாமிய்யர் முகமாய் இருக்கக்கண்டு, அய்யோ கிஷ்ணசாமிய்யரென்று கத்தினாள். கிஷ்ணசாஸ்திரிகள் வருவதற்குள் ஒருவரையும் காணோம். பிறகு அவர் அனந்த லட்சுமியைகண்டித்து உன் பயத்தால் உனக்கு அப்படிதோன்றியிருக்கிறது. இறந்துபோன கிஷ்ணசாமி எப்படி வரமுடியுமென்றார். அனந்தலட்சுமியம்மாள் அவன் கிஷ்ணசாமியே என்று சாதித்தாள். பிறகு கிஷ்ணசாஸ்திரிகள் அதைச் சோதிக்கும்பொருட்டு தன் ஆளை ரகசியமாய் காக்கும்படி சொன்னார். அவன் தூங்காமல் விழித்துப்படுங்கிஇருக்க மெள்ள ஒரு ஆள் கூடத்தில் நுழைந்தான். கிஷ்ணசாஸ்திரிகள் ஆள், உடனே அவனைப் பிடித்துக் கொண்டு கிஷ்ணசாஸ்திரிகளைக் கூப்பிட்டான். பிறகு கிஷ்ணசாஸ்திரிகள் வந்துபார்க்க கிஷ்ணசாமிய்யனை இருக்கக்கண்டார். அவன் அவர்காலில் விழுந்து அவன் வரலாறுகளையெல்லாம் சொல்லி தனக்கு பணம்இல்லாததினால்அவர் வீட்டில் திருடவந்ததாகவும் பணம் கொடுத்துவிட்டால் புதுச்சேரிக்கு ஓடிப்போய்விடுவதாகவும் சொன்னான். கிஷ்ணசாஸ்திரிகள் மனசுநல்லது. ஆதலால்அவனுக்குஎண்ணூறு ரூபாய் கொடுத்து அவன் உடனே புதுச்சேரிக்குப் போகவேண்டுமென்றும் ஒருநாள் தங்கினபோதிலும் சர்க்காருக்குத்தெரிவிப்பதாகவும் சொல்ல அவன் அப்படியே புதுச்சேரிக்குப்புறப்பட்டுப்போய்விட்டான்.

எஸ். இராமஸ்வாமி ஐயர்.

❋ ❋ ❋

## SANKARA PRYAN.

## சங்கரப்பிரியன்.

### XVII. அந்தரங்க அறை.

மனோரஞ்சினி, செட்டியின் அந்தரங்கமான தாதிகளால் பன்னீர் முகத்தில் தெளிக்கப்பட்டு மயில் விசிறிகொண்டு விசிறினதின்மேல் மூர்ச்சை தெளிந்து எழுந்து சுற்றிலும் பார்த்துத்திகைத்துப் பின்வருமாறு ஆலோசிக்கிறாள். "நான் விழித்திருக்கிறேனோ அல்லது தூங்குகிறேனோ நிச்சயப்படவில்லையே! எனது நண்பர் ஆகாரம்சேகரம் செய்துகொண்டுவருவதாகச்சொல்லிச் சென்றது நினைவிருக்கிறது. நான் ஆலமரத்தடியில், களைப்பால் சோர்ந்து எனது நாதனது உத்தரீயத்தை மேலே போர்த்துக்கொண்டு படுத்துக்கொண்டதும் ஞாபகத்துக்கு வருகிறது. நான் இப்பொழுது தூக்கத்தில் கனவுகாணாவிடில் இந்த அற்புதமான அறையில் எப்படிவந்திருக்கக்கூடும்? இவ்வறையைச்சுற்றிலும் விலையுயர்ந்த சோபாக்கள் போடப்பட்டிருக்கின்றன. இவ்வறையில் விரித்திருக்கும் கம்பளமோ, முழங்காலளவு பதியத்தக்கதாயிருக்கிறது. அவற்றில் மாட்டப்பட்டிருக்கும் படங்களும் நிலைக்கண்ணாடிகளும் இவ்வறை ஏதோ ஒரு பெரிய தனிகருடைய அந்தரங்க அறையாகக் காணப்படுகிறது. தவிர இதோ வலதுகைப்புறத்தில் ஒரு படுக்

கை அறையும் காணப்படுகிறது, ஜன்னல்களோ தந்தங்களால் செய்யப்பட்டு சித்திர வேலைகள் செய்யப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு ஜன்னலுக்கு முன்பாகத் தொங்கும் திரையோ உயர்ந்த பட்டுகளாலும் வெல்வெட்டுகளாலும் செய்யப்பட்டிருக்கிறது: தவிர இவற்றை ஒரு பெரிய உத்தியான வனத்தின் மத்தியில் அமைக்கப்பட்டிருக்கிறதாகக் காண்கிறது. ஜன்னல்களின் வழியாகப் பார்க்கின் பச்சைப்பசேரென்று சோலைகள் கண்ணுக் கெட்டினமட்டும் தென்படுகின்றன. தவிர சுற்றிலுமுள்ள அனேகவிதமான புஷ்பங்களின் வாசனைகள் ஒருங்கு கூடி வீசுகின்றன. மரங்களின் கிளைகளின்மேல் மயிலினங்கள் சில கலாபங்களை விரித்தாடிக் கொண்டும், சில கிளைக்குக்கிளை தாவிக்கொண்டு மிருக்கின்றன. பஞ்சவர்ணக்கிளிகள் லக்ஷக் கணக்காய் பழங்களைக் கொத்திக் கொண்டிருக்கின்றன. லக்ஷக் கணக்கான பச்சைக் கிளிகள் மரங்களின் மீது உட்கார்ந்திருப்பது, இலைகளின் பசுமையால் தெளிவாய் காணப்படாவிட்டாலும் அவைகளின் சிவந்த மூக்குகள், பழமில்லாதமரங்களில், யதேஷ்டமான பழங்கள் பழுத்து நிறைந்திருப்பது போன்ற சோபையைத் தருகின்றன. தவிர உத்தியானவனத்தின்மத்தியில் காக்கையிறகு போல் நதி ஒன்று ஓடுகிறது. அந்நதியில், ஹம்ஸங்கள்வாத்துக்கள்முதலிய நீர்ப்பறவைகள் யதேச்சையாய் நீந்திக்கொண்டிருக்கின்றன. தவிர அனேகவிடங்களில் அமைக்கப்பட்டுள்ள (Fountain) அருவிகளிருந்து நீர்த் துளிகள் சிதறி விழுந்துகொண்டிருப்பதும் அதில் பக்ஷிகள் ஸ்நானம் செய்து தண்ணீர் குடிப்பதும் எவ்வளவு அழகாயிருக்கிறது! ஒருபக்கத்தில் கண்ணுக்கெட்டின வரையில் ரோஜாச் செடிகளின் வனமும், மற்றொருபக்கத்தில் சூரியகாந்தப் புஷ்பத்தின் வனமும், இன்னொரு பக்கத்தில் வசந்தகாலத்தில்புஷ்பிக்கும்படியான புஷ்பச் செடிகளின் சேர்க்கையும், இன்னம்மற்ற விடங்களில், மல்லிகை முல்லை, இருவாக்ஷி சண்பகம், மரு மருக்கொழுந்து முதலிய கொடிசெடிகள் பந்தல்களும் பாத்திகளும் குருவேர், வேட்டிவேர் முதலிய வாசனை வேர்களின் பாத்திகளும், இவ்வனத்திற்கு எவ்வித சோபையைக் கொடுத்துக்கொண்டிருக்கின்றன. இன்னம் மெல்லிய கம்பிகளால் பின்னப்பட்டுள்ள வலைகள் மரங்களின்மேல் கட்டப்பட்டு பக்ஷிகள் ஓடிப்போகாமலிருக்கும்படி தடுக்கின்றன. மத்தியில், நீலோத்பலம், அரவிந்தம் செங்கழுநீர் அலலி, முதலான, ஸரோருகபுஷ்பங்களால் அலங்கரித்துள்ள தடாகங்களையும் காண்கிறேன். மேற்சொன்ன நதியிலும் தடாகங்களிலும், மத்ஸ்யங்கள் விளையாடுவது எவ்வளவு அழகாய்க் காண்கிறது! புஷ்பங்களிலிருந்து மதுவை யதேஷ்டமாகப் பானம் செய்து மதம்பிடித்து ரீங்காரம் செய்யும் வண்டுகளின் தொனியும் பக்ஷிகளின் பாட்டும், காதுக்கு இன்பத்தைத் தருகின்றன. இங்குமங்கும் கூட்டம் கூட்டமாக, புள்ளிமான், மான், கலைமான் முதலியவைகளையும் காண்கிறேன். மரங்களின் கிளைகளில், குரங்கினங்கள், பல்லிளித்து சேஷ்டைகள் செய்துகொண்டு,கிளைக்குக்கிளை தாவிக்கொண்டிருக்கின்றன. இவைகளெல்லாம் சுவப்பனத்தில் தோன்றப் படுவனவாகக் காணப்படவில்லை. ஆனால் ஜாக்கிரத்தில் தோன்றப் படுவன என்பதை எப்படி நிச்சயமாய் நம்மக்கூடும்? மரத்தடியில் படுத்திருந்தான் இவ்விடம் எப்படி வந்திருக்கக்கூடும் என்று யோசித்து கண்ணைப்பிசைந்து கொண்டிருக்கும் சமயத்தில், அவ்விடமிருந்த சேடிகள் அவள் கிட்ட நெருங்கி பின்வருமாறு பேசலானார்கள்.

---

## CURRENT TOPICS AND NOTES.

## காலவிசேஷங்களும் குறிப்புகளும்.

---

### மாமகதீர்த்தமகிமை.

"உமையொரு பாகங்கொண்ட வுத்தமன் சொருபமேயா, யமைதர நெடுந்தூரத்தே யமர்ந்துளத் தெண்ணி னூலும், இமைநொடி யளவிற் பாவமெனைத்தையு மிருப்பதாயொண், கமைதரு மகதீர்த்தம்போற் புவனத்துக்காண்ப தின்றே."—குடந்தைப் புராணம்.

காசிவிசுவேசரரைக் குடந்தையில் கண்டு தரிசித்து விஷ்ணு அம்சமாம் ஸ்ரீஇராமர்தம் காயத்தில் ருத்ர அம்சம் கலந்திருக்கப் பெற்ற காயஆரோகண ஸ்தலமாதலால், அங்கே ஸிம்மராசியில் குரு இருக்கும் காலத்தில்வரும் மாசிமகம் விஷ்ணுவும் ருத்ரரும் சேருமோர் புண்யகாலமாம். அநாஹத ஸ்தானத்தில் பைந்தவ ஸ்தலமூர்த்தியை ஒக்கத் தரிசிக்கவல்லார் மஹாமகதீர்த்த புண்ணியத்தைப்

பெற்றுய்வார். "அன்ன மிரண்டுளே ஆற்றங் கரையினில், துன்னி யிரண்டு துணைபிரி யாதன்னம்" என்று சொல்லிய திருமந்திரோபதேசத்தினுண்மையை உள்ளாய்ந்துணர மஹாமகபுண்ணியகாலம்மிகவும் வசதிவாய்ந்ததாம்.

---

### கும்பகோணம் மஹாமகப் பொருட்காட்சி.

கும்பகோணத்தில் மஹாமக உத்ஸவம் 12-வருஷங்களுக்கு ஒருதரம்நேரிடுகிறது. குரு ஸிம்மராசியிலிருக்கும் பொழுதுவரும் மகத்துக்கு மஹாமகம் என்றுபேர். குரு அல்லது வியாழன்என்கிற கிரஹம் ஒவ்வொரு ராசியிலும் ஒரு வருஷம் இருந்து சுற்றிவருவதால், ஸிம்மராசியிலிருந்து சுற்றி மறுபடியும் ஸிம்மராசிக்கு வர 12-வருஷங்கள் பிடிக்கும். இது மஹா புண்ணியகாலமாதலால், இந்தியாவெங்குமிருந்து ஜனங்கள் இந்த மஹாமக ஸ்நானத்துக்காக கும்பகோணம் வந்து கூடுவார்கள். இப்பேர்ப்பட்ட நல்லசமயத்தை மேற்கொண்டு கும்பகோணத்தில் வியவசாயப்பொருள்கள் கைத்தொழிற்பொருள்கள் நிறைந்த காட்சிசாலை யொன்று ஏற்படுத்த வேண்டுமென்று திவான்பஹதூர் ஆர். இரகுநாதராயர் அவர்கள் பிரேரேபணையின்பேரில் அவ்வூர்ப் பிரமுகர்கள் சேர்ந்து முயற்சித்து எல்லாப் பாகங்களிலுமிருந்து விளைபொருள்கள் (Agricultural products) செய்பொருள்கள் (Industrial products) இவைகளைச் சேகரித்து பொருட்காட்சி ஏற்பாடுசெய்ததை நாளது பிப்ரவரிமாசம் 25-ந்தேதியன்று திறந்தார்கள். அப்பொழுது அப்பொருட்காட்சி சபையின் காரியதரிசியாகிய ம-ா-ா-ஸ்ரீ லக்ஷ்மிவராஹய்யங்கார் அவர்களும், அதைத் திறந்தவரான திவான் பஹதூர் இரகுநாதராயர் அவர்களும் ரஸிகமான விவரங்களடங்கிய பிரசங்கஞ் செய்தார்கள்.

முன்னவர் வாசித்த ரிபோர்ட்டிலிருந்து அப்பொருட்காட்சியில், எல்லாவிதமான நெசுவு துணிகள், சரக்குகளெல்லாம் சேகரிக்கப்பட்டிருப்பதாகத்தெரிகிறது. உலோகத்தினல் செய்த சாமான்களில், நித்தியப்படி உபயோகிக்கும் வீட்டுசாமான்களன்றி நல்லவேலைப்பாடுகளமைந்த நேர்த்தியான சித்திர விசித்திரவேலைச் சாமான்களும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. தந்தவேலை, நெட்டிவேலை சாமான்களில் தஞ்சாவூர்பேர்போனதாகையால்,அவையும்நன்ருகச் சேர்க்கப்பட்டிருக்கின்றன. புதிதாய் ஏற்படுத்திய கைத்தரிச்சாலைகளில் செய்யப்பட்ட துணிமணிகளும் பார்வைக்குவந்திருக்கின்றன. மதுரை,சேலம், கோயமுத்தூர், வேலூர் முதலிய இதரநெசவுஸ்தலங்களிலிருந்தும் சரக்குகள் வந்திருக்கின்றன. புதிதாய் வழக்கத்தில்வரும் (fly shuttle looms) என்னும் நூதனமான நெசவுதரிகளும் பார்வைக்குத் தயாராயிருந்தன. சோப்புகள்,மெழுகுவர்த்தி, விகித தளவாடங்கள், மருந்துகள், வாசனைத்திரவியங்கள், இன்னும்மற்ற ரஸாயனசரக்குகள்,கண்ணுடிபீங்கான் சாமான்கள், இரும்புப்பெட்டிகள், ஸ்டீல்டிரங்குகள், கத்திமுதலான சாமான்கள், குடைகள் முதலிய இன்னும் அனேக ஸ்வதேசச்சரக்குகள்பார்வைக்குத் தயாராயிருந்தன. இதுவரையில் இதரதேசங்களிலிருந்து வந்த இந்தச்சரக்குகள் இப்பொழுது இங்கேயே தாயராகிவேலைசெய்யப்பட்டு வருவது சிலாக்கியமே. தோல்சாமான்கள், மைசூர்சித்திரவேலைகள் இவைகளும் பார்வைக்குவந்தன. திவான்பஹதூர் இரகுநாதராயர் அவர்கள் ஸ்வதேசகைத்தொழிலையும், ஸ்வதேசிவேலையாட்கள் க்ஷேமத்தையும் விர்த்தி செய்வதற்கனுகூலமான பல உபாயங்களையும் சீர்திருத்தங்களையும் பற்றிப்பேசினர்.

---

ப்ரோபெஸ்ஸர் லீஸ்-ஸ்மீத் என்னும் வர்த்தக, வியாபார கைத்தொழில் வித்தியாவிற்பன்னர், பம்பாய் கவர்ன்மெண்டார் வேண்டுகோளுக்கிசைந்து பம்பாய் வந்து இந்தியாவின் ஐசுவரிய விருத்திக்கின்றியமையாததான பல விஷயங்களையும் பற்றிப் பிரசங்கங்கள் செய்து வர்த்தக-வியாபார-வித்தியா சம்பந்தமான விஷயங்களில் ஜனங்களுக்கும் சர்க்காருக்கும் உத்ஸாகமுண்டாகும்படியுழைத்து அவ்விஷயங்களில் சிரத்தை யுண்டுபண்ணிவிட்டுப் போயிருக்கிருர். அவர் வந்துபோனதின் பலனுக பம்பாய் யூனிவர்ஸிடி சம்பந்தமாக (Commercial Faculty) வியாபார வித்தியாகலை யொன்று ஏற்படுத்த உத்தேசித்து வருகிருர்கள். அவர் சொல்லிய ஆப்தவாக்கியமொன்றை 53-54-வது பக்கங்களில் தமிழ்ப்படுத்தியிருக்கக்காணலாம்.

---

மேடிகல் காங்ரேஸ்:—பம்பாய் கவர்னர் கனம் பொருந்திய ஸர் ஜியார்ஜ் கிளார்க் அவர்கள் முயற்சியால், பம்பாயில் பிரபலமான மெடிகல் காங்ரெஸ் ஒன்று கூடிற்று. அந்த காங்ரெஸ் சபைக்கு இந்தியாவின் பல பாகங்களிலிருந்தும், இங்கிலாந்து முதலான ஐரோப்பிய தேசங்களிலிருந்தும் பிரபலமான டாக்டர்கள் பிரதிநிதிகளாக வந்திருந்து உஷ்ணதேச சம்பந்தமான வியாதிகள் பலவற்றைப் பற்றி அவரவர்கள் ஆராய்ச்சிசெய்து வந்ததின்முடிவை வியாஸமாயெழுதித் தெரியப்படுத்தினர்கள்.

---

அநுபவத்துக்கு மிஞ்சின அருமருந்தும், விவேகத்துக்கு மிஞ்சின வைத்தியமும் இல்லை:—வைத்தியர்கள் கூடி வியாதியின் கூறுகளை யறிந்து பரிகாரம் தேடுவதுபோல், ஜனங்கள் கூடி தேகத்தின் கூறுபாடுகளையறிந்து சுகவாழ்வுக் கின்றியமையாத சில முர்கியமான தேகதர்மங்களையும், நித்தியப்படி அவர்கள் உபயோகிக்கும் சாமான்ய வஸ்துக்களின் குணகுணங்களையுமறிந்து விவேகத்தால் தேஹபக்குவம், மனுேபக்குவம், பதார்த்தபக்குவமறிந்து பண்டங்களையுபயோகித்து தேஹமனுேசௌக்கியத்தைப்பாதுகாத்துவந்தால், எவ்வளவோ சுகிர்தமுண்டு. "ஆயிரம்பேரைக்கொன்றவன் அரைவைத்தியன்"என்பது

பழமொழி. அதுபோல்'பழம்புண்ணுளிபாதிபரிஹாரி' என்பதும் பழமொழியே. ஆயிரம்பேரைக் கொன்ற அரை வைத்தியனை நம்பி, வியாதிவந்த பிறகு பரிகாரம் தேடுவதிலும், "பழப் புண்ணுளிபாதிபரிகாரி" யென்கிற அனுபவத்திஞல் பட்டுத் தேர்ந்த புத்திசாலிகள் சொல்லும் அனுபவசித்தமான உண்மைகளைக்கேட்டு, தேஹத்தை வியாதிபற்ருது பாதுகாப்பது மேலல்லவா? உதாரணமாக, இந்த சஞ்சிகையில் நமது நண்பர் ஸ்ரீமான் பண்டித வெங்கடராமஐயங்கார் அவர்கள் எழுதியிருக்கும் குறிப்புகளை வாசித்துப் பாருங்கள். அவர் நல்லெண்ணெயின் குணகுணங்களைப்பற்றிச் சொல்வது அவ்வளவும் அக்ஷரலக்ஷம் பெறுமென்று நாம் உறுதியாய்ச் சொல்லுவோம். பரோபகாரமே பெரிதென்றுகருதி அவர் மனமுவந்து ஈசுவர கிருபையை முன்னிட்டுச்சொல்லும் வார்த்தைகள், வாயைத்திறந்து வார்த்தைசொல்லுமுன் கைமேல் காசுபோடவேண்டுமென்று படாடோபம் செய்யும் வைத்தியர் சொல்லுக்கு ஈடாகுமென்று "பணம்பெருத்து"ப் பேய்த்தேரேறித்திரியும் "பிரபுக்கள்" நினைக்கமாட்டார்கள். ஆனுல் ஏழைகளான விவேகிகளுக்கு அவை பரமசாதகமாம். இற்றைக்குப் பத்துவருஷங்கள்முன் இவர் இப்பொழுது வெளியிட்டுள்ள உண்மை, இதையெழுதுபவருக்குத் தெரிந்திருந்தால், வைத்தியர்கையில் சிக்கிப் பட்ட வேதனைகளெல்லாம் சேதனமாகக் குவிந்திருக்கும்.இதைச்சொல்வாரின்றி,படாதபாடும் பட்டுப் பாழுமனம் புண்ணுகி, யோக ஸம்யமத்தில் தோன்றியதோர் திவ்யசாதனுயுக்தியைநம்பி, எண்ணெய் தேய்த்துக்கொள்வதை இன்றைக்கு ஏழு வருஷங்கள் முன்விட்டொழித்தோம். அஃதோடு நம்மைப்பிடித்த பீடையும்விட்டது. இதனுல் எண்ணெய் முழுக்கு கூடாதென்றருத்தமல்ல. எண்ணெய்முழுக்குஅனுகூலமாயிருக்குங்காலமுமுண்டு; பிரதிகூலமாயிருக்குங் காலமுமுண்டு. தேசகால வர்த்தமான விசேஷமும், தேஹமனேபக்குவாடக்குவ நிலையுமறிந்து விவேகத்தால் உசிதமுணர்ந்து உண்மையில் நம்பிக்கைவைத்துச் சாதனசாதகங்களைக்கையாடிவந்தால் தேகமனேசுகத்தைவிர்த்திசெய்துகொண்டு ஆத்மசுகத்தையும் தேடலாம். இதைப்பற்றி சமயம் வாய்ந்துழி நண்பரைக்கொண்டும் நாமும் மேலுமேலுமெழுதிவருவோம. விவேகத்தைக் கைவிட்டால் சாதகமெல்லாம் பாதகமாய் முடியுமென்பதைமட்டும் இதை வாசிப்போர் கவனிக்கவேண்டும்.

---

ப்ரொபெஸ்ஸர்ஜகதீசசந்தர போஸ் அவர்கள் இப்பொழுது அமெரிக்காவிற்கு விஜயமாகச் சென்று, அங்கே, செடிகொடிபோன்ற மூலவர்க்கங்களுக்கு ஜீவசக்தி யிருக்கிறதென்பதைப்பற்றிப் பிரத்தியக்ஷ பூர்வமாகப் பரீக்ஷைகள் செய்துகாட்டி பிரசங்கம் செய்து வருகிருர். அவர் அமெரிக்காவிலிருந்தெழுதிய ஒரு கடிதத்தில், அத்தேசத்து ஐக்கியமாகாணங்களின் வியவசாய இலாகா சம்பந்தமாகமட்டும், ஆயிரம்பேர்கள் பயிர்த்தொழில் சம்பந்தமான சாஸ்திர ஆராய்ச்சிகள் செய்து வருகிருர்களென்றும், இத்தனைபேர்களும் சர்க்கார் செலவில், பயிர்த்தொழில் விர்த்தியின்பொருட்டு வேலைசெய்து வருகிருர்களென்றும், இந்தியாவில் இவர்களில் பத்திலொருபங்கான 'நூறுபேர்கள்கூட சாஸ்திர ஆராய்ச்சி செய்வதற்கில்லையேயென்றும் எழுதியிருக்கிருர்.

---

"இந்தியாகௌன்சில் ஸ்மசோதா" என்றுஒருசட்டம் இந்தியாதுரைத்தன சீர் திருத்தங்களைச் செய்வதற்கின்றியமையாததாக, பார்லிமெந்து லார்ட்ஸ் சபையில் ஆலோசிக்கப்பட்டு வருகிறது. அது மார்ச்சுமீ 4உயன்று கமிட்டியில் ஆலோசிக்கப்படலாயிருந்தது.

---

புதிதான சட்ட நிரூபணசபைகளுக்குப் பிரதிநிதிகள் நியமனம் செய்வதில், மகம்மதியர்கள், தங்கள் ஜனத்தொகைக்கு மிஞ்சினதாய் அதிகப்படி பிரதிநிதிகளை தாங்கள் தாமே பிரத்தியேகமாக நியமிக்கவேண்டுமென்று இந்தியா மந்திரியவர்களைக் கேட்டுக்கொள்ள, அவர் அதற்கிணங்கியிருக்கிருர். மகம்மதியர் கோரிக்கை பலித்ததைப்பார்த்து இந்தியாவிலுள்ள ஆங்கிலேயர்களும், யூரேஷியர்களும் தங்களுக்குப் பிரத்தியேகமாக மூன்றில் ஒருபங்கு பிரதிநிதிகளை நியமிக்கச் சுதந்தரம் தரவேண்டுமென்று விண்ணப்பம் செய்து கொண்டிருக்கிருர்கள்."

---

இந்தியா "டிஸென்ட்ரலிஸேஷன் கமிஷன்" என்று இந்தியாதுரைத்தன அதிகாரத்தை க்ஷேத்திரவிபாகம் செய்து ஜனக்ஷேமவிர்த்தியை நாடவேண்டியதற்கான உபாயத்தைப்பற்றி விசாரணை செய்துவந்த ராயல்கமிஷன் சபையார் அவர்களுடைய ரிபோர்ட்டு வெளியாகி விட்டதாகத் தெரியவருகிறது.

---

இந்தியாவிலுள்ள ஹிந்து சமயங்களின் சம்பிரதாயங்கள் கொள்கைகளைப்பற்றிப் பிரஸ்தாபித்து அவ்வம்மதங்களின் உண்மைகளைவெளிப்படுத்தவேண்டி, கல்கத்தாவில் வருகிற எப்பிரல்மாசம் 9, 10, 11 ம் தேதிகளில் ஒரு 'கன்வென்ஷன்' சபை கூடப்படும். இச்சபைமுன், பற்பல மதத்தைச்சேர்ந்தவர்களும் இச்சபைக்குப் பிரதிநிதிகள் தெரிந்தனுப்புவார்கள். ஒவ்வொரு மதத்தின் கொள்கைகளையும் அனுஷ்டானங்களையும்பற்றி வியாஸ மெழுதிப் படிக்கப்படும். நேரே போக சாத்தியப்படாதவர்கள், அன்னியமத தூஷணையின்றி அவரவர்கள் மதத்தின் கொள்கைகளைப்பற்றி இங்கிலீஷில் வியாசமெழுதியனுப்பலா மென்றபடி பலர் அனுப்பியிருக்கிருர்கள். இச்சபை கூட்டும் கமிட்டிக்குத் தலைவராயிருப்பவர், ஹைகோர்ட்டு ஜட்ஜாயிருந்து சமீபகாலத்தில் பென்ஷன் பெற்றுக்கொண்டு நீங்கின ஸ்ரீ ஸாரதாசாரன் மிட்டர் அவர்களாம்.